



# வ.உ.சி.யின்
# சிவஞான போத உரை

பதிப்பாசிரியர் : ஆ. இரா. வேங்கடாசலபதி

(141)

# வ. உ. சி.யின் சிவஞான போத உரை

பதிப்பாசிரியர் : ஆ. இரா. வேங்கடாசலபதி

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் தோற்றத்திற்கும் சைவ சித்தாந்தத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

கப்பலோட்டிய தமிழர் என்று போற்றப்படும் வ.உ.சி., தம் அரசியல் பணியினூடே சிவஞான போதத்திற்கு ஓர் எளிய உரையினை எழுதி 1935இல் வெளியிட்டார். அறுபதாண்டுகளுக்குப் பிறகு வெளிவரும் மறுபதிப்பு இந்நூல்.

வ.உ.சி.யின் தமிழ்ப் புலமையினையும், தத்துவப் பயிற்சியினையும், கருத்தியல் நிலைப்பாட்டையும் புலப்படுத்தும் அரிய நூல் இது. சைவ சித்தாந்தம் தொடர்பாகப் பல்வேறு சமயங்களில் வ.உ.சி. எழுதிய கட்டுரைகளும், பாடல்களும், கடுஞ்சைவரோடு நடத்திய 'விவாதங் களும், படங்களும் பிற்சேர்க்கையாக வழங்கப்பட்டுள்ளன.

வ. உ. சி.க்கும் சைவ இயக்கத்திற்கும் நிலவிய தொடர்பை விளக்கும் பதிப்பாசிரியரின் முன்னுரையும், சைவ சித்தாந்த மரபில் வ.உ.சி.யின் உரை பெறும் இடத்தை அறுதியிடும் சி. சு. மணியின் ஆய்வுரையும் நூலுக்கு நுழைவாயிலாக அமைகின்றன.

சி. சு. மணி தமிழும் சைவமும் கற்ற அறிஞர். *சித்தாந்த சாத்திரம் பதினான்கு, சிவஞான மாபாடியம்* முதலான நூல்களுக்கு உரையாசிரியர்.

இந்நூலைப் பதிப்பித்துள்ள முனைவர் ஆ. இரா. வேங்கடாசலபதி, பல்லாண்டுகளாக வ. உ. சி. பற்றி ஆய்வு செய்து வருபவர். வ. உ. சி. தொடர்பாக இவர் பதிப்பித்தும் எழுதியும் உள்ள நூல்கள் : *வ. உ. சி. கடிதங்கள்* (1984); *வ. உ. சி.யும் திருநெல்வேலி எழுச்சியும்* (1987); *வ. உ. சி.யும் பாரதியும்* (1994). தற்பொழுது திருநெல்வேலி மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத் துறையில் பணியாற்றுகிறார்.

# வ.உ.சி.யின்
# சிவஞானபோத உரை

த.ந.உலகநாதன்...





பதிப்பாசிரியர்
ஆ. இரா. வேங்கடாசலபதி



வ. உ. சி. சமூக அறிவியல் நிறுவனம்
தூத்துக்குடி 628 008

விற்பனை உரிமை
பாரி நிலையம்

விற்பனை உரிமை

பாரி நிலையம்
184, பிரகாசம் சாலை
சென்னை 600 108

விலை 30 ரூபாய்

வ. உ. சி.யின் சிவஞான போத உரை ❖ பல பிற்சேர்க்கைகளுடன் ❖ பதிப்பாசிரியர் : ஆ. இரா. வேங்கடாசலபதி ❖ முதல் பதிப்பு : ஜூலை 1999 ❖ வெளியீடு : வ. உ. சி. சமூக அறிவியல் நிறுவனம், வ. உ. சி. கல்லூரி வளாகம், தூத்துக்குடி 628 008 ❖ அச்சுக்கோப்பும் அச்சமைப்பும் : காலச்சுவடு பதிப்பகம், 151, கே. பி. சாலை, நாகர்கோவில் 629 001 ❖ அச்சாக்கம் : மல்டி கிராப்ட், சென்னை

Va.Oo.Chiyin Sivagnana Bodha Urai ❖ V.O. Chidambaram Pillai's (1872-1936) commentary on *Sivagnana Bodham* ❖ Edited with an introduction, notes and appendixes by A.R. Venkatachalapathy ❖ Language : Tamil ❖ First edition : July 1999 ❖ Size : Demy Octavo ❖ Pages : 93 ❖ Copies : 1000 ❖ Typeset by Kalachuvadu Pathippagam, Nagercoil ❖ Published by V.O.C. Institute of Social Sciences, V.O.C. College Campus, Tuticorin 628 008 ❖ Printed by Multi Craft, Chennai ❖ Price: Rs.30



*வ. உ. சி.யின்*
*பெயரால்*
*கல்வி நிறுவனங்கள் பல கண்ட*
*அமரர்*
*ஏ. பி. சி. வீரபாகு அவர்கள்*
*நினைவுக்கு . . .*



73-3

# பொருளடக்கம்



# நன்றியுரை

ஏறத்தாழ அறுபத்தைந்தாண்டுகளுக்குப் பிறகு, வ. உ. சி.யின் சிவஞான போத உரை மறுபதிப்பாவது மிகுந்த மகிழ்ச்சியையும் மனநிறைவையும் தருகிறது. காலமும் சூழலும் மாறமாறப் பழையவை மறக்கப்படுகின்றன. ஆரவாரமும் ஆள்பலமும் உள்ளவை மட்டுமே நினைக்கப்படுகின்றன. வ. உ. சி. என்றதுமே இந்த அவலநிலையை எண்ணுவதைத் தவிர்க்க முடியவில்லை.

வ. உ. சி.யின் தியாக வாழ்க்கையே அவருடைய புகழுக்குக் காரணம். ஆனால் அதன் பின்னே பொதிந்திருக்கும் பன்முகப்பட்ட ஆளுமையை இன்று அறிந்திருப்போர் குறைவு. உள்ளீடற்ற புகழ் நெடுநாள் நிலைக்க இயலாது. உள்ளீடுகளை அவ்வப்போது நினைவூட்டுவது ஆர்வலர் கடன். அவ்வகையில் ஒரு முயற்சி இந்நூல்.

*1935*இல் வ. உ. சி. எழுதி வெளியிட்ட சிவஞான போத உரை இத்தனை ஆண்டுகளாக மறுபதிப்பாகவே இல்லை. தமிழன்பர்கள் மட்டுமல்லாமல் வ. உ. சி. அன்பர்களும் மறந்துவிட்ட நூலாக இது அமைந்துவிட்டது.

இவ்வுரை நூலை மீண்டும் தமிழுலகிற்குக் கையளிக்கும் வாய்ப்புக் கிடைத்ததை எண்ணி மகிழ்கிறேன். பிற்சேர்க்கையாக, சைவ சித்தாந்தம் தொடர்பாக வ. உ. சி. எழுதிய கட்டுரைகளும் செய்யுள்களும் வழங்கப் பட்டுள்ளன. ஒரு கட்டுரை கையெழுத்துப்படியாக இருந்தது என்பதை யும் சுட்ட வேண்டும். வ. உ. சி.யின் சீர்திருத்த நோக்கு, மாற்றங்களை விரும்பாத கடுஞ்சைவரின் கடும் எதிர்ப்புக்கு உள்ளாகியிருக்கிறது. இதன் தொடர்பாக வ. உ. சி. கடுஞ்சைவரோடு நடத்திய விவாதங்களும் தரப்பட்டுள்ளன. காலச்சூழலில் பொருத்தி, வரலாற்றுரீதியாக வ. உ. சி. யின் உரையினையும் பிற்சேர்க்கைகளையும் புரிந்துகொள்ள நூலின் தொடக்கத்தில் அமைந்துள்ள இரண்டு முன்னுரைகளும் முயல்கின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும், இருபதாம் நூற்றாண் டின் முற்பகுதியிலும் தமிழ்ச் சமூகத்தில் ஏற்பட்ட மாற்றங்களில் சைவ சித்தாந்தம் என்ற கருத்தியல் ஆற்றிய பங்கையும், அதனோடு வ.உ.சி. கொண்டிருந்த உறவையும் பதிப்பாசிரியர் முன்னுரை காட்டு கிறது. சைவ சித்தாந்த மரபுகளுக்குள் வ.உ.சி.யின் உரை பெறும் இடத்தைத் திரு. சி.சு. மணி அவர்களின் உரை தெளிவுபடுத்துகிறது.

இதன் வெளியீட்டுக்கு உதவிய அன்பர்களுக்கு நன்றி கூறும் இனிய பணி எனக்கு.

இந்நூல் வெளிவருவதைக் கண்டு பெரிதும் மகிழ்ந்திருக்கக்கூடியவர் திரு. வ. உ. சி. சுப்பிரமணியம் அவர்கள். வ. உ. சி. பற்றிய என் ஆய்வுக்குத் தொடர்ந்த ஊக்கம் நல்கிய அவர் இன்று இல்லை என்பது ஆற்றாத துயரைத் தருகின்றது. அவருடைய வாழ்க்கைத் துணைவியார் திருமதி

பத்மாவதி சுப்பிரமணியம் மற்றும் குடும்பத்தினர் அவர் தந்த அன்பை யும் ஆதரவையும் தொடர்ந்து என்னிடம் காட்டி வருவதை எண்ணியே ஆறுதலடைய வேண்டியவனாயிருக்கிறேன்.

இந்நூலைப் பொருளிழப்புக் கருதாமல் வெளியிடுபவர் வ. உ. சி. சமூக அறிவியல் நிறுவனத்தின் தலைவர் திரு. ஏ. பி. சி. வி. சொக்கலிங்கம் அவர்கள்.

வ. உ. சி. ஆய்வுப் பணியில் பதினைந்தாண்டுகளாக எனக்கு உற்ற துணையாக நிற்பவர் புலவர் ஆ. சிவசுப்பிரமணியன் அவர்கள். சிவ ஞான போத உரையின் மறுவெளியீட்டுக்கான எண்ணத்தை எடுத்துக் கொடுத்தவர் அவரே.

இந்நூலுக்குச் சிறந்ததொரு ஆய்வுரையை வழங்கியுள்ள திரு. சி. சு. மணி அவர்கள் தமிழும் சைவமும் பழுதறக் கற்றவர். இந்நூற் பதிப்புத் தொடர்பாகப் பல செய்திகளை அவர் பகிர்ந்து கொண்டிருக்கிறார்.

இந்நூலில் பயன்படுத்தப்பட்டுள்ள ஆவணங்களைப் பார்வையிட வும் படியெடுக்கவும் அனுமதி வழங்கியவை கீழ்க்காணும் நிறுவனங் கள்: மறைமலையடிகள் நூல் நிலையம், சென்னை; தமிழ்நாடு ஆவணக் காப்பகம், சென்னை; உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை; ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகம், சென்னை; மீனாட்சி நூல் நிலையம், புதுக்கோட்டை; நேரு நினைவு அருங்காட்சியகம் மற்றும் நூலகம், புது தில்லி.

இவற்றின் பொறுப்பாளர்களுக்கு - முக்கியமாகத் திரு. இரா. முத்துக் குமாரசாமி, திரு. சு. தியடோர் பாஸ்கரன், மறைந்த திரு. ப. சங்கர லிங்கம், டோரதி - கிருஷ்ணமூர்த்தி இணையர் ஆகியோருக்குத் தனியே நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

அ. செ. சு. கந்தசாமி ரெட்டியார் முதலானோருடன் வ. உ. சி. எடுத்துக் கொண்ட படத்தைக் கொடுத்துதவியவர் அன்னாருடைய பேரர் தெற்குச்சிலுக்கம்பட்டி திரு. சென்னையா அவர்கள். இதன் தொடர் பில் துணைநின்றவர் பேராசிரியர் செ. போத்தி ரெட்டி.

திரு. சி.சு.மணி அவர்கள் சொல்லச் சொல்ல அவருடைய ஆய்வு ரையை எழுதிப் படியெடுத்துக் கொடுத்தவர், திருநெல்வேலி ம. தி. தா. இந்துக் கல்லூரி விரிவுரையாளர் திரு. ஆ. திருநீலகண்டன்.

பல்வேறு வகைகளில் நூலாக்கத்திற்கு உதவியவர்கள் பேராசிரியர் தொ. பரமசிவன், முனைவர் பழ. அதியமான்.

என் முதலாசிரியர்கள் 'முகம்' மாமணி, புலவர் த. கோவேந்தன்.

நூல் அச்சாக்கத்தில் உதவிபுரிந்தவர்கள் காலச்சுவடு பதிப்பக நண்பர்கள் திரு. எஸ். கண்ணன், திரு. சி. மோகன், திரு. எம். எஸ். (எம். சிவசுப்பிரமணியன்), செல்வி சி. லீலா, திரு. அ. குமார், செல்வி ஆர். ஜோதி ஆகியோர்.

இவர்கள் அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி.

சலபதி



# வ.உ.சி.யும் சைவ சித்தாந்தமும்

ஆ. இரா. வேங்கடாசலபதி

வ. உ. சிதம்பரம் பிள்ளை (1872-1936) அவர்கள் சிவஞான போதத்திற்கு எழுதிய உரை ஏறத்தாழ அறுபத்தைந்தாண்டுகளுக்குப் பிறகு மறுபதிப் பாகின்றது. வ.உ.சி.யின் வீரஞ்செறிந்த தியாக வாழ்வுக்கு உருவகமாகக் கப்பலும் செக்கும் அமைந்துவிட்டன. ஆனால், உண்மையில், பன்முகத் தன்மை வாய்ந்த அவருடைய வாழ்க்கை இவ்வுருவகங்களுக்கு அப்பாற் பட்டும் விரிந்து நிற்கின்றது.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் கடைப் பதிற்றாண்டு, இருபதாம் நூற்றாண்டின் முதற் சில பதிற்றாண்டுகள் ஆகியவற்றில் தமிழ்ச் சமூகத்தில் தொழிற்பட்ட பல்வேறு கருத்தியல் போக்குகளும் வ.உ.சி. யின் வாழ்க்கையிலும் அவருடைய செயல்பாடுகளிலும் ஊடாடி நிற்கின்றன. இந்திய தேசிய இயக்கம் என்ற சட்டகம் மட்டுமே அவற்றை வரையறுத்துவிடப் போதுமானதன்று.

வ.உ.சி.க்குத் தமிழ் / சைவ உலகில் இருந்த இடம் இன்று பெரிதும் அறியப்படாதது. இதனை விளங்கிக் கொள்வதானது சிவஞான போதத்திற்கு அவர் இயற்றிய உரையைத் தக்க பின்புலத்தில் புரிந்து கொள்வதற்கு இன்றியமையாதது. அதனைச் சிறிது விரித்துப் புறப் பார்வையாக முன்வைப்பது இம்முகவுரையின் நோக்கம். சைவ சித்தாந்த மரபுகளுக்குள் நின்று, அவற்றிடையே வ.உ.சி. உரையின் இடத்தைப் பொருத்திக் காட்டும் சி.சு. மணி அவர்களின் அறிமுக வுரையோடு இதனை இணைத்துக் காண்பது பயன் தரலாம்.

பதினெட்டாம் நூற்றாண்டின் கடைப்பகுதியிலும் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் சமஸ்கிருத வழிப்பட்ட இந்திய மரபு பற்றிய ஒரு பெரும் தேடலும் விழிப்புணர்வும் ஐரோப்பிய அறிஞர்களிடம் ஏற்பட்டன. 'கீழையவியம்' (*Orientalism*) எனப்படும் இந்த அறிவு மரபு, இன்று ஆதிக்கம் செலுத்தும் இந்து / இந்தியப் பண்பாடு என் பதைக் கட்டமைத்துள்ளது என்றே சொல்ல வேண்டும். இது முன்னெடுத்த பார்ப்பனிய / வைதீக மரபுக்கு மாற்றாக, பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில், தமிழ் / திராவிட வழிப்பட்ட ஒரு மாற்று அறிவு மரபு முகிழ்த்தது. கால்டுவெல்லின் 'திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்' (1856) இதன் தொடக்கப்புள்ளியாகக் குறிக்கப்படும். ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர் முதலான தமிழறிஞர்களின் அரும்பணியால், பல காலம் 'சமயக்கணக்கர் மதிவழி சென்ற' மைய நீரோட்டத் தமிழ் மரபிலிருந்து புறந்தள்ளி வைக்கப்பட்டிருந்த சங்க இலக்கியக்

கருவூலம் மீண்டும் தமிழ்ச் சமூகத்தின் மையத்திற்கு வந்தது. வடமொழித் தளையிலிருந்து விடுபட்டுத் தனித்து இயங்கும் தன்மையும் தொன்மையும் நிறைந்ததாக நிலைநிறுத்தப்பட்ட தமிழ் மொழியின் மூலம் தமிழர்களுக்கென ஒரு தனித்த அடையாளம் சமைக்கப்பட்டது.

வடமொழி சார்ந்த வைதீக மரபை ஊற்றுக்கண்ணாகக் கொண்டு இந்திய தேசியம் அனைத்திந்திய அளவில் வளர்ந்தது. தமிழ்நாட்டில் இதன் அடித்தளமாகப் படித்த, நடுத்தர வர்க்கத்தைச் சார்ந்த பார்ப்பனர்கள் விளங்கினர். மரபுவழிப்பட்ட சாதிய மேலாண்மையை, காலனியாதிக்கத்தின்கீழ் நவீனமயமாகிவந்த சமூகத்திலும் தகவமைக்க இந்திய தேசியமும் அதன் கருத்தியல் மூலங்களும் பயன்படுத்தப் பட்டன.

அரசியல், சமூகக் களங்களில் இதற்குத் தமிழ்நாட்டில் அறைகூவல் விடுத்தவர்கள், பெரிதும் நிலவுடைமையைப் பொருளியல் பின்புலமாகக் கொண்டு, மேற்கத்திய கல்விமுறையின் மூலம் நவீனச் சமூகத்தில் பார்ப்பனர்களுக்குப் போட்டியாக வந்த பல்வேறு வேளாளச் சாதியினர் ஆவர். காலனி ஆட்சிக் காலத்தில் இச்சாதிகள் பிறப்பித்த அறிவாளர்களின் எண்ணிக்கையும் அவர்களின் சாதனைகளும் இந்திய தேசிய அறிவாளர்களுக்கு எவ்வகையிலும் குறையாதன.[1]

இவர்கள் தமிழ் வழிப்பட்டதொரு மாற்று மரபை மீட்டுருவாக்கம் செய்ய முனைந்தனர். இதில் ஒரு போக்கு சாதி சமயங்களை முற்றாக மறுத்து, பொதுமையும் சமத்துவமும் நிறைந்த தமிழ்ச் சமூகத்தை நிறுவி, அனைத்துப் பிரிவினரையும் இணைத்துச் செல்ல முற்பட்டது (பெரியாரின் தலைமையிலான சுயமரியாதை இயக்கம்). இதன் இன்னொரு போக்கு, பெரிதும் பார்ப்பனரல்லாத, வேளாள உயர்சாதியினரைச் சமூக அடித்தளமாகக் கொண்டிருந்தது. இப்போக்கு, தமிழைச் சைவத்தோடு இணைத்து நோக்கியது. சங்க காலத்தை வேளாளர் நாகரிகத்தின் உச்சமாகவும், சைவ சமயத்தைத் தமிழர் சமயமாகவும் கண்டது. சைவமும் தமிழும் ஒருபொருட்பன்மொழியாகப் புரிந்துகொள்ளப்பட்டன என்றாலும் பொருத்தமானதே.

சமூக நோக்கில் இது விமரிசனத்திற்கு உரியதே எனினும், புதிதாக உருப்பெற்றுவந்த நவீனச் சமூகத்தில் பார்ப்பனிய மேலாண்மையை எதிர்த்தது என்பதாலும், கருத்தியல் நிலையில் வைதீக மரபுக்கு அறைகூவலாக அமைந்தது என்பதாலும், இதன் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட்டுவிடக்கூடாது.

தமிழகமெங்கும் சைவ சபைகள் தொடங்கப்பட்டன: சைவ சித்தாந்த சபை, தூத்துக்குடி (1883); சைவ சித்தாந்த சபை, திருச்சி (1885); சைவப் பிரகாச சபை, திருவனந்தபுரம் (1885); சைவ சபை, பாளையங்கோட்டை (1886). சைவ சபைகளின் ஒருங்கிணைப்பு மையமாகச் சைவ சித்தாந்த மகாசமாஜம் 1905இல் நிறுவப்பட்டது. சித்தாந்த சாத்திரங்கள் உரையோடும் விளக்கத்தோடும் ஆங்கில மொழிபெயர்ப்போடும் வெளியிடப்பட்டன. 1897இல் 'சித்தாந்த தீபிகை' வெளிவரத் தொடங்கியது. பெ. சுந்தரம் பிள்ளை, சூளை சோமசுந்தர நாயகர், வெ.ப. சுப்பிரமணிய முதலியார், மறைமலை

யடிகள், கா. சுப்பிரமணிய பிள்ளை என ஒரு பெரும் அறிஞர் வட்டம், பிரதேச எல்லைகளைக் கடந்து, தமிழகம் தழுவிய அறிவாளர்களாக எழுந்தனர்.

மேலும், அன்றைய தமிழ்ச் சமூகத்தின் சாதியக் கட்டமைப்பின் இடைநிலையில் இருந்த பல சாதிகள் மேனிலையாக்கம் பெறுவதற்கும் சைவம் பயன்பட்டது. இந்தியாவின் பிற பகுதிகளில் மேனிலையாக்கம் சமஸ்கிருதமயமாக்கம் என்ற வடிவத்தை எடுத்ததற்கு (அதாவது பார்ப்பன நிலையினை அடையும் இலக்கு) மாறாகத் தமிழ்ச் சமூகத்தில் இடைநிலைச் சாதிகள் வேளாள நிலையை அடைய முற்பட்டன. 'கள்ளர், மறவர், அகமுடையார் மெள்ள மெள்ள மாறி வெள்ளாளரா னார்' என்ற பழமொழியும் இதனை நன்குணர்த்தும். பல சாதிகள் வேளாளருக்குரிய 'பிள்ளை' எனும் பட்டத்தைப் பெயருக்குப் பின் னொட்டாகப் பயன்படுத்துவதையும் இங்கு நினைவில் கொள்ளலாம். 'புதுவை முரசு' என்ற ஏடு 1931இல் குறிப்பிட்டவாறு,

> நாட்டார்கள் என்பவர்கள் யாரென்பது அநேகருக்குத் தெரியாது. அவர்கள்தான் சைவம் பரப்பப்படுவதற்கு முன்பு 'கள்ளர்கள்' என்று அழைக்கப்பட்டவர்கள்.... 'அன்பு' மயமாகிய சைவம் பரவ ஆரம்பித்துப் பழைய 'கள்ளர்கள்' புது 'நாட்டார்கள்' ஆன பின் அநேக விஷயங்களில் அவர்கள் நாகரீகமடைந்து விட்டார்கள்.[2]

வேளாளரே மிக உயர் சாதியாக விளங்கும் யாழ்ப்பாணச் சமூகத்திலும் இதனையொத்த சமூக அசைவியக்கம் தொழிற்படுவதைப் பேராசிரியர் கா. சிவத்தம்பி சுட்டிக் காட்டியுள்ளார்.[3]

### வ.உ.சி.யும் சைவருலகும்

இந்தப் பின்னணியில் வ.உ.சி.யின் சைவச் செயல்பாடுகளைப் புரிந்துகொள்ள வேண்டும். இந்திய தேசிய இயக்கம், தொழிலாளர் இயக்கம், நீதிக் கட்சி, சுயமரியாதை இயக்கம் எனத் தம் சமகால அரசியல் இயக்கங்கள் எல்லாவற்றுடனும் வ. உ. சி. தொடர்பு கொண்டி ருந்தவர்தான் எனினும், பொது வாழ்க்கையில் சைவருலகோடு இடை யறாத ஈடுபாட்டை அவர் கொண்டவராய் இருந்திருக்கிறார்.

1872இல் இன்றைய தூத்துக்குடி மாவட்டம் ஒட்டப்பிடாரத்தில் பிறந்த வ. உ. சி., 1898இலேயே காங்கிரஸ் இயக்கத்தோடு தொடர்பு கொண்டிருந்தார் எனத் தெரிகிறது.[4] எனினும், அவரது ஆரம்பகட்டப் பொதுவாழ்க்கை சைவத்தோடு இணைந்திருந்திருக்கிறது. சைவக் கோலத்தில் பல அன்பர்களோடு சேர்ந்து எடுத்துக்கொண்ட புகைப் படம் ஒன்றும் இந்தக் காலப்பகுதியில் காணக்கிடைக்கின்றது.[5]

1900இல் ஒட்டப்பிடாரத்திலிருந்து தூத்துக்குடி நகருக்குக் குடி பெயர்ந்த வ. உ. சி., அங்கு சைவ சித்தாந்த சபையுடன் நெருங்கிய உறவு வைத்துக் கொண்டிருந்திருக்கிறார்.

> சைவசித் தாந்த சபையினுட் புகுந்து
> கைவரக் கொண்டேன் கருத்தினி துரைத்தலை

என்று அச்சபையில் உரையாற்றியதன் மூலம் தாம் பேச்சாற்றலை வளர்த்துக் கொண்டதை வ. உ. சி. தம் சுயசரிதையில் குறித்துள்ளார்.[6] 1904 சூன் முதல் 1905 ஆகஸ்டு வரை மட்டும் அச்சபையில் எட்டு சொற்பொழிவுகளை ஆற்றியிருக்கிறார் வ. உ. சி.[7] மேலும் தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையின் ஆண்டுக் கூட்டங்கள் பலவற்றில் சிறப்பு அழைப்பாளர்களை வரவேற்று வ. உ. சி. வாழ்த்துப் பாக்களைப் பாடியிருக்கிறார்.[8] சிவஞான போத உரைக்குத் தொடக்கப் புள்ளியாக அமைந்த வ. உ. சி.யின் முதற் சொற்பொழிவு தூத்துக்குடி சபையிலே தான் நிகழ்த்தப் பெற்றது என்பதை அவரே தம் உரையின் பிற்சேர்க்கையில் குறித்துள்ளார் என்பதும் இங்குக் கருதத்தக்கது.

சைவவுலகின் தனிப்பெரும் அறிஞராக விளங்கிய மறைமலையடிகளோடு 1903இலேயே வ. உ. சி.க்குத் தொடர்பு இருந்ததை முன்னவரின் நாட்குறிப்புகள் காட்டுகின்றன.[9] 1903இல் தம் ஆசிரியர் சூளை சோமசுந்தர நாயகரைப் பற்றி இயற்றிவந்த 'சோமசுந்தர விஜயம்' எனும் நூல் பற்றிய அறிக்கையைத் தூத்துக்குடியிலிருந்த வ. உ. சி.க்கு மறைமலையடிகள் அனுப்ப, அவர் அதற்குக் கையொப்பம் செலுத்தி இருக்கிறார்.[10] மறைமலையடிகளின் 'முல்லைப்பாட்டு ஆராய்ச்சியுரை' யினையும் வ. உ. சி. விலைக்கு வாங்கியிருக்கிறார்.[11] 1905 மே திங்களில், தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையில் உரையாற்ற வந்தபோது மறைமலையடிகள் வ. உ. சி.யின் இல்லத்தில் தங்கி உணவருந்தி இருக்கிறார்.[12] மறைமலையடிகள் நடத்திவந்த 'ஞானசாகரம்' இதழின் இரண்டாம் தொகுதிக்கு (1904) 10 ரூபாய் நன்கொடை செலுத்தி, 'கௌரவாபிமான சீலர்' ஆக வ. உ. சி. விளங்கி இருக்கிறார்.[13] 1906ஆம் ஆண்டில் ஒவ்வொரு நான்கு மாதத்திற்கும் கையொப்பம் செலுத்தி, சைவ சித்தாந்த மகாசமாஜத்திலும் வ. உ. சி. உறுப்பினராய் விளங்கி யிருக்கிறார்.[14]

1906இல் வேகம்பெற்ற சுதேசி இயக்கக் காலத்தில் சுதேசிக் கப்பல் கம்பெனியை நிறுவியும், தொழிலாளர் வேலைநிறுத்தத்தை முன்னின்று நடத்தியும், தென் தமிழ்நாட்டில் பெருமளவு மக்களை அரசியல்ரீதியாகத் திரட்டியும் இந்திய தேசிய இயக்க வரலாற்றில் நீங்கா இடம்பெற்ற வ. உ. சி., 1908இல் கைது செய்யப்பட்டார். 1912ஆம் ஆண்டின் கடைசி நாள்களில்தான் சிறையிலிருந்து விடுதலை கிடைத்தது. இந்த வேகமான அரசியல் இயக்கச் செயல்பாடுகளுக்கிடையில் அவருடைய சைவச் செயல்பாடுகளுக்கு இடம் இருந்திருப்பது ஐயமே.

இதன் பிறகு சென்னையிலும் (1913-1920), கோயம்புத்தூரிலுமாக (1920-1924) அவருடைய வாழ்க்கைப் போராட்டம் தொடர்ந்திருக்கிறது. பொருள் வளம் குன்றிய நிலையிலும், அரசியல் வேலைகளோடு இலக்கியப் பணிகளும் தொடர்ந்திருக்கின்றன. தூத்துக்குடி சிவநேசச் செல்வர் சபையின் 10, 11ஆம் ஆண்டு நிறைவுக் கூட்டங்களில் 1922, 1923ஆம் ஆண்டுகளில் வ. உ. சி. கலந்துகொண்டு உரையாற்றியமைக்குச் சான்று உள்ளது.[15]

1925இல் பெரியார் ஈ.வெ.ரா. சுயமரியாதை இயக்கம் கண்ட பிறகு, தமிழ்நாட்டின் அரசியல் வாழ்க்கையில் பெருமாற்றம் ஏற்பட்டது.

பார்ப்பனரல்லாதார் இயக்கத்தின் திசைப் போக்கையும் இந்நிகழ்வு மாற்றிவிட்டது. பார்ப்பனரல்லாத மேல்சாதிகளின் நலன்களையே பெரிதும் பிரதிபலித்து வந்த நீதிக் கட்சியிலிருந்து விலகி, தமிழ்ச் சமூகத்தின் இடைத்தட்டுச் சாதிகளை உள்ளடக்கி, தீவிரமான கருத்தியல் முனைப்பைச் சுயமரியாதை இயக்கம் பெற்றது. இப்பண்பு மாற்றமும் அளவு மாற்றமும் பார்ப்பனரல்லாதார் இயக்கத்துக்குள் வேளாளரின் நிலையை ஆட்டங்காண வைத்தன. சமய மறுப்பு, சாதி எதிர்ப்பு, புராணக் கண்டனம், கடவுள் மறுப்புப் பிரசாரம் முதலான சுயமரியாதை இயக்கத் தீவிரக் கொள்கை பிரசாரம் சைவருலகுக்குப் பெரும் அறைகூவலாக விளங்கியது.[16]

இதை எதிர்கொள்ள முனைந்தபொழுது சைவருக்குள் பிளவுகள் தோன்றின. முதல் பிரிவினரான பொ. முத்தைய பிள்ளை, சுவாமிநாத பண்டிதர், ராம. சொ. சொக்கலிங்க ஐயா, பலவான்குடி இராமசாமி செட்டியார் போன்றோர் கடுஞ்சைவர் எனத்தக்கவர். இவர்கள் எந்தவிதமான மாற்றத்தையோ சீர்திருத்தத்தையோ விரும்பாத வரட்டுத் தனம் மிக்கவர்கள். திரு.வி.கலியாணசுந்தர முதலியார், ச. சச்சிதானந்தம் பிள்ளை, ம. பாலசுப்பிரமணிய முதலியார் முதலான பெரும்பான்மைச் சைவப் பெருமக்களை நடுத்தரச் சைவர் எனலாம். காலத்துக்கேற்றவாறு சில சீர்திருத்தங்களைச் செய்து, சைவத்தைத் தகவமைத்துக் கொண்டு அதனைக் காப்பது இவர்கள் நோக்கம். வ. உ. சி., சொ. முருகப்பா, பொ. திரிகூடசுந்தரம் பிள்ளை, கே. எம். பாலசுப்பிரமணிய முதலியார் முதலானோரைச் சீர்திருத்தச் சைவர் எனக் குறிப்பிடலாம். இவர்கள் சுயமரியாதை இயக்கத்தின் பிரசாரத்தால் கவரப்பட்டு, சற்று தீவிர மான நிலைப்பாட்டை மேற்கொண்டனர். ஆனால், நடைமுறைகளில் தான் இவர்களுக்கும் நடுத்தரச் சைவர்களுக்கும் வேறுபாடேயொழிய கருத்தியல் முறையில் பெருமளவு இடைவெளி இல்லையென்றே சொல்ல வேண்டும்.

சைவருலகில் 1920களிலும் 1930களிலும் நிலவிய மேற்கண்ட பிரிவு களினூடே வ. உ. சி.யின் சைவக் கருத்தியல் பார்வையில் ஏற்பட்ட மாற்றங்களை இனிப் புரிந்துகொள்ள முயல்வோம். 1928இல் செட்டி நாட்டில் அவர் ஆற்றிய சொற்பொழிவுகளில் பல சீர்திருத்தக் கருத்து களைச் சற்று அழுத்தமாகவே வெளியிட்டார்.[17] பிறப்பின் அடிப்படை யில் ஏற்றத் தாழ்வு கற்பித்தல், பெண்ணடிமைத்தனம், குழந்தை மணம், நீத்தார் நினைவு கடைப்பிடித்தல், 'சிறு' தெய்வங்களுக்கு உயிர்ப்பலியிடுதல் போன்றவற்றை அவ்வுரைகளில் கடிந்து பேசியதில் வ. உ. சி.யின் சீர்திருத்த உணர்வும், சுயமரியாதை இயக்கக் கொள்கை களின் செல்வாக்கும் துலக்கமாக வெளிப்படுகின்றன.

"சிரார்த்தம் என்ற பெயரால் பார்ப்பாருக்கு அளிக்கப்படும் அரிசி, காய்கறி முதலியன பிதுர்களுக்குப் போய்ச் சேருமென்று கூறுவது பொய்யேயாகும்" என்றும், "மனுஸ்மிருதி கொடுமை நிறைந்த நூல்" என்றும் வ.உ.சி. எடுத்துக் கூறினார். இவற்றுக்கும் மேலாக,

> எந்த நூலானாலும் குற்றமிருக்குமானால் அதனைத் தள்ளத் தயங்கக் கூடாது. நமக்குக் கடவுள் பகுத்தறிவைக் கொடுத்திருக்

> கிறார். அதனைக் கொண்டு ஆராய்வோம்... கடவுள் எழுதினார் என்று கூறப்படும் நூலிலும் பிழையிருக்குமானால் அதனையும் தள்ளவேண்டியதுதான்... பெரியபுராணத்தில் கூறப்பட்டிருக்கும் மனுஸ்மிருதி இப்பொழுது உள்ளதுதான் என்று கூறினால், சேக்கிழாருக்கும் பிராமணருக்கும் சம்பந்தமுண்டென்று கூறு வதைத் தவிர வேறென்ன சொல்வது? வேதத்தில் பிழைகளிருக் கலாம். திருத்த வேண்டியதுதான். சைவத்திலும் அப்படியே தான்...[18]

கடுஞ்சைவர்கள் இதற்காக வ. உ. சி.யை மிகக் கடுமையாகத் தாக்கி யுள்ளனர். குறிப்பாக, பொ. முத்தைய பிள்ளை 'அரங்கின்றி வட்டா டல்' என்ற தலைப்பில் கடிந்து எழுதியபோது, வ. உ. சி. சிறை சென்றதை இழித்துக் கூறினார். இதற்கு மறுமொழியாக, 'அரங்கு வகுப்பார் யார்?' என்ற பொருள் பொதிந்த கேள்வியை வ. உ. சி. எழுப்பினார். இவ்விவாதம், செட்டிநாட்டிலிருந்து வெளியான 'சிவநேசன்' என்ற கடுஞ்சைவ இதழில் நடந்தது. (இதன் முழுமையைப் பிற்சேர்க்கையில் காண்க.) இதில், சுயமரியாதைக் கொள்கைகளில் சீர்திருத்தச் சைவருக் கிருந்த உறுதிப்பாட்டின்மையைக் காண முடிகின்றது. வ. உ. சி.யின் செட்டிநாட்டுச் சொற்பொழிவுகளில் காணப்படும் தீவிரம், பொ. முத்தைய பிள்ளைக்கு அவர் எழுதிய விடையில் பெருமளவு நெகிழ்ந்திருப்பதைப் பார்க்க முடிகின்றது.

1929 மார்ச்சில் திருநெல்வேலியில் நடந்த சைவப் பெரியார் தனிக் கூட்டம் இங்கு முக்கியத்துவம் வாய்ந்தது. சைவருலகில் பெரும் புயலைக் கிளப்பி, சுயமரியாதை இயக்கத்தின் அறைகூவலுக்கு நடுத்தரச் சைவரின் விடையாக இக்கூட்டம் அமைந்தது. அதில் கலந்துகொண்ட வ. உ. சி. சீர்திருத்தச் சைவரின் அணியினையே சார்ந்திருந்தார்.

> [விஷயாலோசனைக் கூட்டத்தில்] சைவ சமயத்தைச் சீர்திருத்த வேண்டிய முறைகளைப் பற்றி திரு. வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் எடுத்துக் கூறினார்கள். ஆனால் அவர்களுடைய சீர்திருத்த முறைகளைப் பலர் ஒத்துக்கொள்ள வில்லையாதலால் திரு. பிள்ளையவர்கள் உடனேயே கமிட்டிக் கூட்டத்தினின்றும் வெளியேறினார்.

என்று 'குமரன்' (11 ஏப்ரல் 1929) குறிப்பிட்டது. 'குடி அரசு' இதழ் (7 ஏப்ரல் 1929) இதனை உறுதிப்படுத்தும் வகையில்,

> [விஷயாலோசனைக் கமிட்டியில்] திருவாளர் வி.ஓ. சிதம்பரம் பிள்ளை, திரிகூடசுந்தரம் பிள்ளை முதலியவர்கள் கூட்டத்திற்கு அனுமதிக்கப்படவில்லையாம். இதனால் திரு. சிதம்பரம் பிள்ளை அவர்கள் சைவப் பெரியார் மகாநாட்டிற்கு வந்ததில் சைவத்தில் மற்றவர்களையும் பற்றுக்கொள்ளச் செய்வதற்குப் பதிலாகச் சைவத்திலிருந்து பிரிந்துபோக நேரிட்டதுதான் சைவப் பெரியார் மகாநாட்டின் பலன் என்று சொல்லிக்கொண்டு வெளியேறி விட்டாராம்.

என்று எழுதியது. சுயமரியாதை இயக்க ஏடுகளான 'குடி அரசு', 'குமரன்' ஆகியவற்றின் கூற்றுகளில் மிகை உள்ளது என்று தோன்றுகிறது.

இவற்றுக்கு மறுப்பாக, ம. பாலசுப்பிரமணிய முதலியார் எழுதிய பதிலில், சைவப் பெரியார் தனிக்கூட்டத்தில் வ. உ. சி.யின் பங்கைப் பற்றிப் பின்வருமாறு கூறியிருக்கிறார்.

> இனித் திருவாளர் வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள் கூட்டத்தில் நடந்துகொண்டதைப் பற்றிக் கூறுதும். முதல் நாள் இரவு விஷயாலோசனைக் கூட்டத்துக்கு அவர் வந்திருந்தார். ஒவ்வொரு தீர்மானத்தையும் நன்கு ஆராய்ந்து ஒவ்வொரு வார்த்தையையும் நன்றாய்க் கவனித்து, பல திருத்தங்களெல்லாம் சொன்னார். முதல் இரண்டு தீர்மானங்களை முழுவதும் ஒப்புக்கொண்டார். மூன்றாவது தீர்மானத்தில் சைவ உணவு கொள்ளுதல் அவசியம் என்பதை ஒப்புக்கொள்வதாகவும் சிவ சின்னங்களாகிய 'சாம்பல், கொட்டை'யால்தான் சைவர்கள் கெட்டுப் போகிறார்களென்றும் சின்னங்கள் அணிதல் அநுட்டானப் பகுதியென்றால் சைவர்கள் குறைந்து சைவமே அழியுமென்றும் வாது செய்தார். சின்னங்களணிவது இன்றியமையாதது என்று நான் வற்புறுத்தினேன். பிறகு தலைவரும் திருவாளர்கள் கே. சுப்பிரமணியப் பிள்ளையும், ந. மு. வேங்கடசாமி நாட்டாரும் கேட்டுக் கொண்டதின்மேல் இன்றியமையாதது என்ற சொல்லை நீக்கிப் பொது அநுட்டானமாகும் என்று முடித்தோம். அதற்கு திரு. வ. உ. சி. பிள்ளை ஒன்றும் குறைகூறவில்லை. மூன்றாவது நாள் பொதுக்கூட்டத்துக்கு வந்தபோதும் பட்டையாகத் திருநீறணிந்தே வந்தார். அன்று விஷயாலோசனைக் கூட்ட உறுப்பினர்களிடம் கையெழுத்து வாங்கிய போதும் தாமும் கையெழுத்து செய்துள்ளார். சைவப் பெரியார் தனிக்கூட்டத்தினிறுதியில் புகைப்படம் எடுத்தபோதும் விபூதியணிந்து வந்து இப்பெரியார் உடனிருந்தார்.[19]

சீர்திருத்த நாட்டத்திற்கும் நடைமுறை ஒழுகலாறுகளுக்கும் இடையே தத்தளிக்கும் நிலை வ. உ. சி.யிடம் இருந்ததை இது புலப்படுத்துகின்றது. அவருடைய சிவஞான போத உரையைப் புரிந்துகொள்வதற்கு இந்தப் பின்னணி இன்றியமையாதது.

## சிவஞான போத உரை

*1934-35*ஆம் ஆண்டளவில் சிவஞான போத உரையின் முன்வடிவை வ. உ. சி. எழுதியிருக்கிறார். அதனை 'தினமணி'யில் வெளியிட்டுமிருக்கிறார். அதன் பிறகு, அவ்வுரை தூத்துக்குடி - எட்டையபுரம் நெடுஞ்சாலையில் உள்ள குறுக்குச்சாலையில் அ. செ. சு. தர்மச் சத்திரத்தில் அரங்கேற்றப்பட்டுள்ளது. அவ்வரங்கேற்றத்தில் பெறப்பட்ட எதிர்வினைகளைக் கருத்தில் கொண்டு, தம் உரையைச் செப்பனிட்டு நூலாக்கியிருக்கிறார் வ. உ. சி. இதற்கு இடைப்பட்ட காலத்தில் 'ஞானவாசிட்டம்' என்ற வேதாந்த நூலை முறையாகப் பயின்றிருக்கிறார் எனத் தெரிகிறது. ச. சோமசுந்தர பாரதிக்கு எழுதிய ஒரு கடிதத்தில் (*12* செப்டம்பர் *1935*), ஒவ்வொரு காலையிலும் மணி *7* முதல் *9* வரையிலும் இவ்விடம் கீழூர் மகா-௱-௱-ஸ்ரீ பிரமானந்த சுவாமிகள் மடத்தின் தற்கால அதிபதி ஸ்ரீ சோமசுந்தர சுவாமிகள் துறவிகளும் இல்லாருமாகிய

25 பேர்களுக்கு 'ஞானவாசிட்டம்' சொல்லி வருகிறார்கள். அவ்விருபத் தைந்து பேர்களில் நான் ஒருவன்.[20]

என்று குறிப்பிட்டுள்ளார்.

ஒரு வாழ்நாள் முழுவதும் கொண்டிருந்த சைவ ஈடுபாட்டின் விளைவு வ. உ. சி.யின் சிவஞான போத உரை எனல் மிகையன்று. அதே வேளையில் மரபான சித்தாந்தப் புலமைக்கும், பொது வாழ்வி லும் மக்கள் சார்ந்த அரசியல் இயக்கத்திலும் கொண்ட முனைப்புக்கும் இடைப்பட்ட ஒரு தத்தளிப்பை வ. உ. சி.யிடம் உணர முடிகின்றது.

புதுமை நாட்டமும் மக்கள் நலமும் மனத்தில் கொண்ட வ.உ.சி., கடுஞ்சைவத்தைக் கடுமையாக எதிர்கொண்டிருக்கிறார். இருப்பினும், ஒரு எல்லைக்குட்பட்ட அவருடைய சீர்திருத்த எண்ணங்கள், வேதாந் தத்தோடு (வைதீகம்) சித்தாந்தத்தைச் சமரசம் காண வைத்துள்ளன என்பதை சி. சு. மணி தம் ஆய்வுரையில் நுட்பமாக விளக்கியுள்ளார். ஆனால், அதே வேளையில், சிந்தாந்திகளால் கடுமையாக மறுக்கப்பட்ட நாத்திகக் கொள்கையினையும் அணைத்துச் செல்ல வ. உ. சி. முயன்றி ருக்கிறார் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது.

வ. உ. சி. தாம் வாழ்ந்த காலத்தின், உலகத்தின் கருத்தியல் எல்லைக் குட்பட்டே செயல்பட்டிருக்க முடிந்திருக்கின்றது. இதைச் சுட்டும் போது, இதற்கும்கூடக் கடுஞ்சைவர்களிடமிருந்து கடும் எதிர்ப்பு வந்ததை நாம் மறந்துவிடலாகாது. தீக்கை பெறாதவர் உரை எழுதக் கூடாது என்ற வசைக்கு விடையாக, நூல் அச்சிட்டு முடிந்த பிறகு, உள்அட்டையில் நான்கு வெண்பாக்களை வ. உ. சி. எழுதியிருக்கிறார். மேலும், இவ்வளவில் அமைந்த உரையும்கூட சிவஞான போதம் பற்றிய கடுஞ்சைவரின் புரிதலுடன் ஒப்பிட எத்துணை முற்போக்கு டையதாக இருந்தது என்பதை வ. உ. சியின் சொற்களாலேயே அறிவோம்.

> சிவஞான போதத்திற்கு ஓர் உரை எழுதித் 'தினமணி' வருஷ அனுபந்தத்திற்கு அனுப்பியுள்ளேன். ஸ்ரீ சிவஞான சுவாமிகள் உரையைக் கண்டித்தால், சைவர் பலர் மனம் நோகுமென்று கருதி அது செய்யாது விடுத்துள்ளேன். என் உரை சுவாமிகள் உரைக்குப் பல இடங்களில் வேறுபட்டும் மாறுபட்டுமுள்ளது. இதற்கும் போலிச் சைவர் குழாம் என்னை நிந்தித்தல் கூடும். அந்நிந்தனையை வந்தனையாகவே கொள்ளும் மனநிலையுடை யேன் தற்காலம்.[21]

## சான்றுக் குறிப்புகள்

1. இதேபோல் பெரிதும் புறக்கணிக்கப்பட்ட அடிமட்ட சாதிகளின் அறிவாளர்களாக அயோத்திதாஸப் பண்டிதர், அத்திப்பாக்கம் வெங்கடாசல நாயகர் முதலானோரைக் கருதலாம். இவர்களுடைய பங்களிப்புகளையும், இவர்கள் முன்வைத்த மாற்றுகளையும் அங்கீகரிக்கப்பட்ட அறிவு மரபு இப்பொழுதுதான் அறிந்து கொள்ளத் தலைப்பட்டுள்ளது. இதன் தொடர்பில், அயோத்தி

தாசரைப் பற்றி அறிய: G.Aloysius, *Religion as Emancipatory Identity: A Buddhist Movement among the Tamils under Colonialism*, New Delhi, 1998.

2. *புதுவை முரசு*, 5 சனவரி 1931, தலையங்கம்.
3. கா. சிவத்தம்பி, *தமிழ்ச் சமூகமும் பண்பாட்டின் மீள்கண்டுபிடிப்பும்*, நியு செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1994, ப. 73-4.
4. *சுதேசமித்திரன்*, 15 ஆகஸ்டு 1898 (*குமரிமலர்*, மே 1981இல் மறு பதிப்பு).
5. இந்தப் படத்தை வ. உ. சி. கல்லூரி 1972இல், அவரது நூற்றாண்டு விழாவின்போது வெளியிட்ட மலரில் காணலாம். மேலும் இந்நூல் ப. 59.
6. வ. உ. சி. *சுயசரிதை*, பாரி நிலையம், சென்னை, 1976 (6ஆம் பதிப்பு), ப. 41.
7. 'தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையின் 22ஆம் வருட அறிக்கைப் பத்திரமும் நிபந்தனைகளும், 1905' இன் அடிப்படையில் மா.ரா. அரசுவின் குறிப்பு. 'வ.உ.சி.யின் இலக்கியப் பணிகள்', *தமிழ்ப்பொழில்*, சூலை - ஆகஸ்டு 1982.
8. 22ஆம் ஆண்டு நிறைவில், தலைவர் பாண்டித்துரைத் தேவர்க்கு வாழ்த்துப்பா (வ. உ. சி., *பாடற்றிரட்டு*, சென்னை, 1914, ப. 21 - 24); 29ஆம் ஆண்டு நிறைவு விழாவில் தலைவருக்கு வாழ்த்துப்பா (வ. உ. சி., *பாடற்றிரட்டு*, ப. 88 - 92); 49ஆம் ஆண்டு நிறைவு விழாவில் தலைவர் டி.கே. சிதம்பரநாத முதலியாருக்கு வாழ்த்துப்பா (வ. உ. சி. கையெழுத்துப்படிகள் - மறைந்த வ. உ. சி. சுப்பிரமணியம் அவர்கள் பார்வையிடக் கொடுத்தவை).
9. மறைமலையடிகள் ஆங்கிலத்தில் எழுதிய நாட்குறிப்புகளின் தேர்ந்தெடுத்த சில பகுதிகள் தமிழாக்கப்பெற்று நூலுருப் பெற்றுள்ளன. ஆ. இரா. வேங்கடாசலபதி (ப-ர்), *மறைமலையடிகளார் நாட்குறிப்புகள்*, சென்னை, 1988.
10. மறைமலையடிகள் நாட்குறிப்பு, 4-7-1903; 14-7-1903.
11. மறைமலையடிகள் நாட்குறிப்பு, 25-10-1903.
12. மறைமலையடிகள் நாட்குறிப்பு, 29-5-1905; 30-5-1905.
13. *ஞானசாகரம்*, இரண்டாம் தொகுதியின் (1904) ஒவ்வொரு இதழிலும் 'கௌரவாபிமான சீலர்' பட்டியலில் வ. உ. சி.யின் பெயர் இடம் பெற்றுள்ளது.
14. *ஞானசாகரம்*, 3(2), மாசி, விசுவாச; 3(7), ஆடி, பராபவ.
15. 10ஆம் ஆண்டு நிறைவில் 'திருவள்ளுவர் பெருமை' என்பது பற்றி உரை (*சுதேசமித்திரன்*, 28 திசம்பர் 1922); 11ஆம் ஆண்டு நிறைவில் 'திருவள்ளுவர் திறம்' பற்றி உரை (*சுதேசமித்திரன்*, 15 சூன் 1923).
16. திராவிட இயக்கத்திற்கும் சைவருக்குமான உறவைப் பற்றி பிறிதோரிடத்தில் நான் விரிவாக எழுதியுள்ளேன்: *திராவிட இயக்கமும் வேளாளரும்*, சவுத் ஏசியன் புக்ஸ், சென்னை, 1994;

'Dravidian Movement and Saivites', *Economic and Political Weekly*, 8 April 1995; 'At the Margins: Saivite Intellectuals in the Dravidian Movement', in K.A. Manikumar (ed.), *History & Society: Essays in Honour of Professor S.Kadhirvel*, Madras, 1996.

17. *குமரன், 26 சனவரி 1928; 8 மார்ச் 1928; 15 மார்ச் 1928.* (ஆ. இரா. வேங்கடாசலபதி, *திராவிட இயக்கமும் வேளாளரும்*, பிற்சேர்க்கை 3.)
18. *குமரன், 26 சனவரி 1928.*
19. 'இதுவோ சுயமரியாதை', *சித்தாந்தம்*, மே 1929.
20. ஆ. இரா. வேங்கடாசலபதி (ப - ர்), *வ. உ. சி. கடிதங்கள்*, சேகர் பதிப்பகம், சென்னை, 1984, ப. 129.
21. ச. சோமசுந்தர பாரதிக்கு வ. உ. சி.யின் கடிதம் (12-9-1935), *மேலது*, ப. 130.



# சித்தாந்த மரபும் வ. உ. சி.யின் சிவஞானபோத உரையும்

சி. சு. மணி

தமிழகம் தந்த மாமனிதர் வ. உ. சி. பன்முகத் திறமைகள் அவரிடம் மிளிர்ந்தன. கப்பலோட்டிய தமிழன், செக்கிழுத்த செம்மல் என்று இரண்டு தொடர்களைச் சொல்லி அவருடைய ஆளுமையை ஒரு சிமிழுக்குள் அடக்கி விடுவதுதான் இன்று வழக்கத்திலிருந்து வருகிறது. இவை மரியாதைக்குரிய பட்டங்கள்தாம் எனினும் வ. உ. சி.யின் முழுப்பரிமாணத்தையும் ஓரளவு மறைக்கவும் இவை பயன்படுத்தப் பட்டு வருகின்றன.

வ. உ. சி. நாட்டுப்பற்றுடையவர். நெஞ்சுரம் மிகுந்த தொழிற்சங்கத் தலைவர். வெள்ளையர்களின் கடல் வாணிகத்திற்கெதிராகப் போட்டி நீராவிக் கப்பல்களை ஓட்டியவர். தொலைநோக்குப் பார்வையுடன் கடலோடும் மாலுமிகளுக்குப் பயிற்சிக்கழகம் ஒன்றைத் தோற்றுவிக்கத் திட்டமிட்டவர்.

தொல்காப்பியம், திருக்குறள் மணக்குடவர் உரை போன்ற பல நூல்களின் பதிப்பாசிரியராக விளங்கினார். தாமே பல பாடல்கள் புனைந்தார். செய்யுள் நடையிலும் உரைநடையிலும் பல நூல்களை ஆக்கித் தந்தார். ஜேம்ஸ் ஆலன் எழுதிய பல நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்தார். தமது வாழ்க்கை வரலாற்றை அகவல் யாப்பில் எழுதி வெளியிட்டார். பல துறைகளிலும் ஆராய்ச்சிக் கட்டுரைகளை எழுதினார். திருக்குறளின் முதல் நான்கு அதிகாரங்களும் திருவள்ளுவர் எழுதியவைதாமா என்றே ஒரு விவாதத்தைக் கிளப்பினார். அவருடைய வாழ்வின் கடைசி நாட்களில் பழைய அரசியல் நண்பர்களால் கைவிடப்பட்ட போதும், கலங்காது தாம் தேர்ந்தெடுத்த பாதையில் எதிர்ப்புகளையும் மீறிப் பணியாற்றியவர் வ. உ. சி.

சிவஞான போதத்திற்கு வ. உ. சி. ஓர் உரை எழுதி வெளியிட்டார் என்பது பலர் அறியாத செய்தி. ஏறத்தாழ அறுபத்தைந்து ஆண்டு களுக்குப் பிறகு அந்நூல் இப்போது ஆர்வலர்களின் முயற்சியால் மீண்டும் பதிப்பிக்கப் பெறுகிறது.

## சைவ சமயமும் சைவ சித்தாந்தமும்

சிவ வழிபாடு மிகவும் தொன்மையானது. மொகஞ்சதரோ, அரப்பா ஆகிய சிந்து நாகரிகங்களிலேயே சிவ வழிபாடு இருந்தது என்பதை அறிஞர்கள் ஒத்துக் கொண்டுள்ளனர். இந்தியப் பெருநாட்டில் நேபாளத் தில் லகுலீசபாசுபதம், காசுமீரத்தில் பிரத்திய பிஞ்ஞை, மராட்டியத்தில்

வழக்கில் உள்ள சிவதரிசனம், நாதசம்பிரதாயம், கர்நாடகத்தில் வீரசைவம், நீலகண்ட சிவாச்சாரியாரின் சிவாத்துவித சைவம், தமிழ்நாட்டில் சித்தாந்த சைவம் - இவ்வாறு நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் சிவவழிபாட்டின் பரப்பைக் காண முடியும். சில அறிஞர்களின் கருத்துப்படி இந்திய நாட்டு எல்லைக்கு வெளியேயும் பல நாடுகளில் இவ்வழிபாடு இருந்து வந்துள்ளது.

இந்த இடத்தில் ஒரு கருத்தை நாம் நினைவில் கொள்ள வேண்டும். சைவ சமயம், சிவ வழிபாடு என்பன வேறு; சைவ தத்துவங்கள் என்பன வேறு. சைவ சமயம் என்பது வழிபாடு, நம்பிக்கை, வழக்க ஒழுக்கங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் அமைந்தது.

சைவ தத்துவங்கள் என்பன இவற்றுக்கு முற்றிலும் வேறாக, உலகம் என்பது உண்மையா பொய்யா? அது படைக்கப்பட்டதா அல்லவா? அதனைப் படைத்தவர் யார்? எதற்காகப் படைத்தார்? உயிர் அல்லது ஆன்மா என்ற ஒன்று உண்டா இல்லையா? உயிரின் குறிக்கோள் யாது? என்பன போன்ற வினாக்களுக்கு விடை அளிப்பன வாக அமையும்.

மேலே கூறப்பட்ட சைவ வகைகள் வழிபடு கடவுளை சிவன் என்ற பெயராலேயே குறிப்பிட்டாலும், தத்துவ அடிப்படையில் தங்களுக்குள்ளே பல முரண்பாடுகளைக் கொண்டவை. இவ்வகையில் பார்க்கும்போது சைவம் என்பது சமயம்; சித்தாந்தம் என்பது தத்துவம். எனவே சைவ சித்தாந்தம் என்பது தமிழகத்திலே தோன்றிய தமிழகத்துக் கேயுரிய தத்துவம் என்பதை நாம் உணர முடியும்.

இந்தியத் தத்துவங்களைப் பற்றி ஆராய்ந்த அறிஞர்கள் பலர் தத்தம் நூல்களில் சைவ சித்தாந்தம் பற்றி எழுதாமலே விட்டனர். எழுதியவர்களும் பெயரைக் குறிப்பிட்டதோடு நின்றுவிட்டனர்; அல்லது அரைகுறையாக எழுதினர். டாக்டர் இராதாகிருஷ்ணன், பேராசிரியர் ஹிரியண்ணா போன்றவர்களும் இதற்கு விதிவிலக்கு அல்லர். சைவ தத்துவங்களிலேயே ஊறி மராத்தி மொழியில் 'சைவ தத்துவம்' என்ற நூலை எழுதிய டாக்டர் கணேச வாசுதேவ தகாரேயும் இதற்கு விதிவிலக்கு அல்லர். கி. பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த சைவ சமய குரவராகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோ ரோடு தகாரே தம் நூலை நிறுத்திக் கொள்கிறார். அதன்பின் வந்த தத்துவ நூல்களின் (மெய்கண்ட சாத்திரங்களின்) ஆசிரியர்களைப் பற்றியோ அவர்களது நூல்களைப் பற்றியோ இவர் எதையும் குறிப்பிட் டிலர். இதிலிருந்து தமிழர்களின் சைவ சித்தாந்தம் தமிழ்நாட்டுக்கு வெளியிலே அண்டை மாநிலங்களில்கூட அறியப்படவில்லை என்பது தெளிவாகிறது. இத்தனைக்கும் தகாரேயின் நூல் 1980களில்தான் எழுதப்பட்டது.

## சைவ சித்தாந்தம்

தமிழர்களின் தத்துவச் சிந்தனை வளர்ச்சி தொல்காப்பிய காலம் முதற்கொண்டே தொடங்கிற்று. திருக்குறள் அவ்வளர்ச்சியில் மிக முக்கியமான இடத்தைப் பெற்றது. சங்க இலக்கியங்களிலும் இவ் வளர்ச்சிப் போக்கு ஆங்காங்குத் தென்படுகின்றது. பக்தி இலக்கிய

காலத்தில் சைவத் திருமுறைகளில் சைவமும், வைணவப் பாசுரங்களில் வைணவமும் பல தத்துவக் குறிப்புக்களைக் கொண்டுள்ளன. திருஞான சம்பந்தர் முதலிய திருமுறை ஆசிரியர்கள் சைவ மெய்ப்பொருளியலின் கருத்துக்களைத் தமது பாடல்களில் பல இடங்களில் பதித்து வைத்துள் ளனர். ஆயினும் இவை யாவும் இலக்கியங்களே. இலக்கியம் கண்ட பிறகே இலக்கணம் தோன்றும். அதற்கிணங்க இவ்வருளாளர்களின் காலத்திற்குப் பிறகு சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் தோன்றின என்பர்.

சைவ சித்தாந்தக் கொள்கையைச் சுருங்கிய சொற்களாலே இந்த இடத்தில் குறிப்பிடுவது பொருத்தமாக இருக்கும். ஆனால் அவ்வாறு சுருக்கிக் கூறுதல் என்பது முற்றிலும் இயலாத காரியம் என்பதும் உண்மை. ஆயினும் அடிப்படைகளையாவது அறிந்துகொள்ள முயல் வோம். ஒருவனே ஆகிய இறைவன், எண்ணிலியாகிய உயிர்கள், இறைவனிடத்து நெருங்க முடியாத அதாவது அவனைப் பற்ற இயலாத மலம் எனப்படும் அழுக்கு ஆகிய மூன்று பொருள்களும் தோற்றமில் காலந்தொட்டே உள்ளன. இவற்றுக்குத் தோற்றம் இல்லை ஆதலால் இவற்றுக்கு அழிவும் இல்லை. மலம் என்பதை ஆணவம் என்றும் அழைப்பர். ஆணவம் என்பது செருக்கு என்ற பொருளைத் தராது. அது உயிரின் அறிவை மறைத்துக் கீழான இன்பங்களில் ஈடுபடச் செய்து உயிரை அணுத்தன்மைப்படுத்துகிறது. இப்படி ஆணவ மலக் கட்டினால் இருட்டறைக்குள் தவிக்கும் எண்ணற்ற உயிர்களுக்கு அறிவூட்டி உய்வடையச் செய்யும் பொருட்டு இறைவன் அவ்வுயிர்களுக்கு உடம்பு, அறிவுப்பொறிகள், செயற்பொறிகள், வாழ்வதற்கு ஏற்ற ஓர் உலகம், அவ்வுலகத்தில் துய்ப்பதற்கேற்ற பொருள்கள் ஆகியவற்றைத் தன் பெருங்கருணையினால் படைத்தளிக்கிறான். இதனால் சிறிது சிறிதாக அறிவு வளர்ச்சி பெற்ற உயிர்கள் தம் செயல்களுக்கேற்ற பயன்களை நுகர்ந்து, சீலம் (சரியை), நோன்பு (கிரியை), செறிவு (யோகம்), அறிவு (ஞானம்) ஆகியவற்றை அடைந்து பக்குவப்படும். அவ்வாறு பக்குவப்பட்ட உயிர்களை இறைவன் ஆட்கொண்டருளு வான். அவை அவனுடைய திருவடி நிழலை அடைந்து, தம் தனித் தன்மையை இழக்காமல் என்றும் மாறாத இன்பத்தை நுகர்ந்தபடி இருக்கும். இவ்வாறு கூறப்படுகின்ற கருத்துக்களுக்கு எல்லாம் சைவ சித்தாந்தத்தில் தடைகள் எழுப்பி விடைகள் தரப்படுகின்றன. இதனால் தான் முடிந்த முடிவு என்ற பொருள்தரும் சித்தாந்தம் என்று இத்தத்துவ மரபு அழைக்கப்படுகிறது.

இந்திய மெய்ப்பொருளியலில் உள்ள கருத்துக்களில் பலவற்றிலும் நல்லன கொண்டு அல்லனவற்றை ஒதுக்குவது சைவசித்தாந்தம். இதனை, வ. ஆ. தேவசேனாபதி சைவ சித்தாந்தத்தின் அடிப்படைகள் (சென்னைப் பல்கலைக்கழகம், 1981) என்ற நூலில் மிக அருமையாகக் குறிப்பிடுகிறார்:

> சாங்கியர் போல சத்காரிய வாதத்தை ஏற்று (ஆனால் அவர் களுடைய இறையிலிக் கொள்கையை விடுத்து), நையாயிகர் களைப்போல இறைவன் உண்டு எனக் கொண்டு (ஆனால்

அவர்களுடைய அசத்காரிய வாதத்தை விடுத்து), நையாயிகர் களைப்போல அன்யதாக்கியாதியை ஏற்று (ஆனால் அவர்களு டைய பரதப்பிராமாணியக் கொள்கையை விடுத்து), மீமாம் சகர்களைப்போல் ஸ்வதப் பிராமாணியத்தை ஏற்று (ஆனால் அவர்களுடைய இறையிலிக் கொள்கையை விடுத்து), அத்வைதி களைப் போல் ஜீவன் முத்தியை ஏற்று (ஆனால் அவர்களுடைய நிர்குணப் பிரம்மம் - மாயாவாதம் போன்றவற்றை விடுத்து), விசிஷ்டாத்வைதிகளைப் போல இறைவனை எண்ணில் பல் குணம் எழில் பெற உடையவனாகக் கொண்டு (ஆனால் அவர்களுடைய ஜீவன் முத்தி மறுப்பை விடுத்து) - இவ்வாறெல் லாம் கருத்துக்களையும் கொள்கைகளையும், ஏதோ எவ்வாறோ என்று குவித்துக் கலவையாக்காமல், தன்னுடைய அடிப்படைக் கோட்பாட்டிற்கேற்ப [சைவசித்தாந்தம்] இயைபுறப் பொருத்துவது கருதற்பாலது.

மேலே காட்டப்பட்டுள்ளபடி சைவ சித்தாந்தத்தை இந்திய மெய்ப் பொருளியல் சிந்தனைகளோடு ஒத்தும், உறழ்ந்தும் கற்கும்போதுதான் அதன் சிறப்பையும் முழுமையையும் புரிந்துகொள்ள முடியும்.

## மெய்கண்ட சாத்திரங்கள்

மெய்கண்ட சாத்திர நூல்கள் பதினான்கு என்று கொள்வது மரபு. இவற்றுக்கு முன்னும் பின்னும் இக்கருத்துக்களை விளக்கும் பல நூல்கள் உள்ளன என்பதையும் நாம் மறந்து விடுவதற்கில்லை.

இப்பதினான்கு நூல்களில் திருவுந்தியாரும், திருக்களிற்றுப்படியாரும் மெய்கண்டாரின் சிவஞான போதத்திற்குக் காலத்தால் முற்பட்டவை. ஆயினும் சிவஞான போதத்தின் ஆசிரியராகிய மெய்கண்ட தேவ நாயனாரின் பெயரையே முதன்மையாகச் சுட்டி இந்நூல்கள் குறிப் பிடப்படுகின்றன. ஏனெனில் சிவஞான போதமே அறிவார்ந்த முறையில் எடுப்பு, தொடுப்பு, முடிப்பு என்று திட்டமிட்ட முறையில் கருத்துக்களை முன்வைக்கிறது. இச்சிறப்பை அறிந்த அருள்நந்திசிவம் தமது நூலாகிய சிவஞான சித்தியாரைச் சிவஞான போதத்தின் அமைப்பு முறையைப் பின்பற்றியே எழுதினார். அருள்நந்திசிவம் மெய்கண்டாரின் நேரடி மாணவருள் ஒருவர் என்பர். அதே போல இவர்களுக்கு ஒரு நூற்றாண்டுக்குப் பின்னர் வாழ்ந்த ஆசிரியர் உமாபதிசிவம் தமது சிவப்பிரகாச நூலை மெய்கண்டாரின் நெறிப் படியே அமைத்தார். மெய்கண்டாரின் நூலைச் சிவஞான போதம் என்று பெயரிட்டு முதன்முதலில் வழங்கியவர் உமாபதிசிவமே. அருள்நந்திசிவம் தமது ஆசிரியரின் நூலை இப்பெயரால் குறிப்பிடாமல் "வெண்ணெய் மேவி வாழ் மெய்கண்டான் நூல்" என்றே குறிப்பி டுகிறார்.

## சிவஞான போதம்

மெய்கண்டாரின் சிவஞான போதம் மொத்தம் பன்னிரண்டு நூற்பாக்களைக் கொண்டது. இந்நூற்பாக்கள் யாவும் அகவல் யாப்பில், ஆக மொத்தம் நாற்பது வரிகளால் ஆயவை. எனவே அதன் செறிவும் திட்பமும் எளிதில் புரிந்துகொள்வதற்கு அரியவை. இவற்றின் கருத்தை

விளக்குவதற்காக மெய்கண்டாரே ஒரு வார்த்திகப் பொழிப்புரை எழுதினார். அதனோடு அமையாது இந்நூற்பாக்களை 39 பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு ஒவ்வொரு பகுதிக்கும் மேற்கோள், ஏது, எடுத்துக் காட்டு என்று விளக்கமும் தந்துள்ளார். இங்கே மேற்கோள் என்று சொல்லப்பட்டது இன்றைய நடையில் எடுகோள் என்று பொருள்படும். இவற்றுள் மேற்கோளும், ஏதுவும் உரைநடையில் அமைந்தவை. எடுத்துக்காட்டு என்ற பகுதியில் 81 வெண்பாக்கள் அடங்கும். இவை தவிர நூலின் முதலில் ஒரு சிறப்புப் பாயிரமும், இறுதியில் ஒரு சிறப்புப் பாயிரமும் இடம் பெற்றுள்ளன. நூலின் தொடக்கத்தில் மங்கல வாழ்த்துச் செய்யுள் ஒன்றும் அதனை அடுத்து அவையடக்க வெண்பா ஒன்றும் அமைந்துள்ளன. 'அணுவைத் துளைத்து ஏழ் கடலைப் புகட்டிக் குறுகத் தறித்ததை'விட இந்நூல் மிகச்செறிவாக அமைந்துள்ளமையால் இந்த விளக்கங்கள் தேவைப்பட்டன எனலாம். அவையும் போதாமையினாலே செய்யுள் நடையில் அமைந்த விளக்க நூலாகச் சிவஞான சித்தியார் எழுந்தது. அதன் பின்னரும் சிவஞான போதத்திற்கு எண்ணற்ற உரைகள் தோன்றின; தோன்றியவண்ண முள்ளன.

## உரைகளும் வேறுபாடுகளும்

மிகச்சிறந்த ஆசிரியர்கள் எழுதிய நூல்கள் பொருட்செறிவு உடையனவாக இருந்தால் அவற்றுக்கு உரையாசிரியர்களும் பலர் தோன்று கிறார்கள். தொல்காப்பியத்திற்கு உரை எழுதியவர்கள் பலர். திருக் குறளுக்குப் பழங்காலத்தில் பத்து உரையாசிரியர்கள் உரை வகுத்துள் ளனர். இந்த நூற்றாண்டிலோ கேட்கவேண்டியதில்லை. தாளும் பேனாவும் கிடைத்தவர்கள் எல்லாம் உரை எழுதத் துணிந்து விடுகிறார் கள். சிலர், திருக்குறள் மனு நீதியை நிலைநாட்ட வந்த நூல் என்றார்கள். சிலர் திருவள்ளுவரைச் சமணர் என்றார்கள். வேறு சிலர் அவரைச் சைவர் என்றார்கள். 'ஏசுவின் சீடர்களில் ஒருவரான புனித தாமசிடம் ஞானஸ்நானம் பெற்ற கிறித்தவர்தாம் திருவள்ளுவர்' என்று சிலு வையைக் கையில் பிடித்துக்கொண்டு சத்தியம் செய்தார் மற்றொருவர். வேறொருவர் வள்ளுவரை வைணவர் என்று சாதித்தார். இப்பழக்கம் உரையாசிரியர்களிடம் மிகுதியும் காணப்படுகிறது.

திருக்குறளைப் போலவே மெய்கண்டாரின் சிவஞான போதத்திற் கும் கருத்து மாறுபாடுடைய உரைகள் காலந்தோறும் தோன்றியுள்ளன. கி.பி. 16ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஞானப்பிரகாசர் என்பவர் சிவஞான போதம் சிவசமவாதத்தை விளக்குவதாக அமைந்தது என எழுதினார். வேறு ஒருவர் சிவாத்துவித சைவத்தைச் சொல்லுவதே சிவஞான போதம் என்றார். சங்கரரின் ஏகான்மவாதத்தை அடிப்படை யாகக் கொண்டு கோ. வடிவேலுச் செட்டியார் ஓர் உரை வகுத்தார். மிக அண்மையில்கூட முருகேசன் என்பவர் சிவஞான போதத்தை முற்றிலும் மாறுபட்ட வகையாகப் பிரித்து ஒரு புதிய உரை எழுதினார். இவை எல்லாம் உரையாசிரியர்களின் இயல்பைக் காட்டுகின்றன. அதே வேளையில் மூலநூலின் பெருமையையும் செறிவையும் நமக்கு உணர்த்துகின்றன என்றே நாம் கருத வேண்டும்.

இந்த இடத்தில் சூத்திரம் (நூற்பா) என்ற இலக்கிய வகை பற்றி இலக்கண நூலார் கூறும் கருத்தை நாம் நினைவில் கொள்ளுவது நலம். 'சில்வகை எழுத்தில் பல்வகைப் பொருளைச் செவ்வன் ஆடியிற் செறித்து இனிது விளக்குவது' சூத்திரம் என்பார்கள். எழுத்துக்கள் - அதாவது சொற்கள் - சிலவாக இருத்தல் வேண்டும். அதே நேரத்தில் பல்வேறு வகைப்பட்ட பொருள்களை ஐயங்கள் தீரும் வண்ணம் பொருட்செறிவோடு விளக்குதல் வேண்டும். பழுதற்ற கண்ணாடி எவ்வாறு தனக்கு முன்புள்ள பொருள்களைக் கோட்டமும், மிகையும், சுருக்கமும் இல்லாமல் எதிரொளிக்கிறதோ அவ்வாறே ஆசிரியரின் கருத்தை ஐயம் திரிபின்றிச் சூத்திரம் விளக்குதல் வேண்டும்.

எனவேதான் அறிஞர்கள் சூத்திரம் என்னும் இலக்கிய வகையில் அமைந்த ஒவ்வொன்றுக்கும் அடிப்படையாக ஒரு பெரிய விவாதமே நடந்திருக்க வேண்டும் என்று கொள்ளுகிறார்கள். ஏனெனில் சேர்க்கத் தக்கவற்றைச் சேர்த்து, விலக்கத்தக்கவற்றை விலக்குவதற்கு முன்பு ஓர் ஆசிரியன் தன்னையொத்த புலவர்களுடனோ தனக்குத் தானேயோ ஒரு பெரிய விவாதத்தை நிகழ்த்தி இருக்க வேண்டும். அந்த விவாதத் தின் கூறுகள் அச்சூத்திரத்தில் நேரடியாகவோ மறைமுகமாகவோ அமைந்து கிடக்கும். அதன் உயிர் நாடியான கருத்தைக் கல்வி உணர்ந்து கொள்வதே கல்வி. இதனாலேயே காலந்தோறும் புதிய உரைநூல்கள் தோன்ற வேண்டுவதும் நேர்கிறது.

## சிவஞான முனிவரின் பேருரையும் சிற்றுரையும்

சிவஞான போத நூலுக்கு எழுந்த உரைகளில் மிகவும் விரிந்த, விளக்கமான, நுட்பமான உரை எனும் சிறப்பு மாதவச் சிவஞான முனிவரின் 'திராவிட மாபாடிய'த்துக்கே உரியது. இதனைச் சிவஞான மாபாடியம் என்றும் ஆசிரியர் பெயரைச் சுட்டி வழங்குவர். மாபாடி யம் என்பது மகாபாஷ்யம் என்பதன் தமிழ் வடிவம். அதன் நேரான தமிழ்ப் பொருள் பேருரை என்பது. மாதவச் சிவஞான முனிவர் பாணினியின் இலக்கண நூலுக்குப் பதஞ்சலி செய்த ஒரு பேருரை போலத் தமிழ்த் தொல்காப்பியத்திற்கும் தாம் ஒரு பேருரை எழுத வேண்டும் என்று திட்டமிட்டிருந்தார். அதன் விளைவாகவே அவர் 'தொல்காப்பியப் பாயிர விருத்தி', 'தொல்காப்பிய முதற் சூத்திர விருத்தி' ஆகிய நூல்களை எழுதினார். அதன் பின்னரே அம் முயற்சியைக் கைவிட்டு, அத்தகைய ஒரு பேருரையைச் சிவஞான போதத்திற்கு எழுதி வழங்கினார்.

அவ்வுரையை எழுதி முடித்த பிறகு அதனைத் திருவாவடுதுறையில் அரங்கேற்றினார். அதன் பிறகும் சில ஆண்டுகள் வாழ்ந்தார். கி.பி. 1785ஆம் ஆண்டு சித்திரைத் திங்களில் மறைந்தார். ஆனால் அவருடைய பெரும் புலமையையும், அறிவுத் திறத்தையும் காட்டும் பேருரை உலக வெளிச்சத்துக்கு வராமலேயே ஏறத்தாழ 150 ஆண்டுகள் கழிந்தன. பாரதி காலத்தில் முதன்முதலில் அச்சில் வெளிவந்த சிவஞான மாபாடியப் பதிப்பு முழுமை பெற்றது அன்று. ஏறக்குறைய இதே காலத்தில் (பராபவ ஆண்டு, ஆனித் திங்கள், 1907) வெளிவந்த

யாழ்ப்பாணத்து வண்ணைநகர் சுவாமிநாத பண்டிதரின் பதிப்பும் இத்தகையதுதான்.*

இந்நூலின் ஓரளவு திருந்திய பதிப்பு 1922ஆம் ஆண்டுதான் வெளிவந்தது. அப்போதும்கூட ஆறாம் சூத்திர உரையின் இறுதிப்பகுதி முழுவதும் கிடைக்காமல் போயிற்று. 1977ஆம் ஆண்டில் க. வச்சிரவேலு முதலியார் தாம் எழுதிய 'சிவஞான பாடியத் திறவு' என்ற நூலின் பின்னிணைப்பாக இதனைத் தந்துள்ளார். தமிழர்கள் தங்கள் நூல்களை, அதுவும் ஆன்மீகச் சார்புள்ள நூல்களை, சந்தனமும், குங்குமமும் சாத்தி மலர் தூவி வழிபடுவதில் காட்டும் அக்கறையை அவற்றைப் படிப்பதிலோ, பதிப்பிப்பதிலோ காட்டுவதில்லை. இன்றும்கூடச் சிவஞான முனிவரின் உரை தோன்றிய திருமடம் அவர் கைப்பட எழுதிய ஏட்டுச் சுவடிகளைத் தேடிக்கொண்டுதான் இருக்கிறது.

## வ.உ.சி.யின் உரை தோன்றிய சூழ்நிலை

ஒரு குலத்தாருக்கே கல்வி என்ற கட்டுப்பாடு இந்தியப் பெருநாட்டில் பல நூற்றாண்டுகளாக மிகக் கடுமையாக நடைமுறைப்படுத்தப்

---

* 'இந்தியா' 22.12.1906 இதழில் வந்த பாரதியின் மதிப்புரை:

சிவஞான பாஷ்யம்

இப்புத்தகத்தை நாம் மிகுந்த ஆவலுடன் படித்தோம். மதுரை 'விவேகபானு' ஆபிஸிலிருந்து நமக்கு அனுப்பப்பட்டது. தமிழிலே நல்ல பழக்கமுடைய எல்லோரும் நெடுங்காலமாக இது எப்போது வெளியாகுமோவென்று, யூத ஜாதியார் மேஸையாவின் வரவுக்குக் காத்திருப்பது போலக் காத்துக் கொண்டிருந்தார்கள். தமிழ் பாஷையிலே மிகுந்த பயிற்சியில்லாத நாம்கூட இளமை முதலாக "ஐயோ, சிவஞான முனிவர் செய்திருப்பதாகச் சொல்லப்படும் ஆதி திராவிட மகாபாஷ்யம் என்ற அரிய நூலைத் திருவாவடுதுறை ஆதினத்தார் உலகறியாமல் மூடி வைத்திருக்கிறார்களாமே? அது எத்தனை அருமையுடையதாயிருக்குமோ? எப்போதுதான் வெளிவருமோ?" என்று பல முறை பெருமூச்செறிந்திருக்கின்றோம். இப்போது அந்த அருமையான நூலைக் குறைந்த விலையில் அச்சிட்டனுப்பியதன் பொருட்டு விவேகபானு ஆபீஸாருக்கு மிகவும் நன்றி செலுத்துகிறோம். இந்த நூல் நாம் எதிர்பார்த்திருந்ததற்குச் சிறிதேனும் பெருமையிலே குறைவுபடாது விளங்குகிறது. இன்னும் சில பகுதிகள் பிரசுரித்தோருக்குக் கிடையாமல் போய்விட்டமை பற்றி விசனமுறுகின்றோம். இந்நூலிலே விஷயங்கள் சைவ சித்தாந்த மார்க்க சம்பந்தமானதால் அவற்றைப் பற்றிப் பெருமையாக விவரிப்பது பொது ஜனங்களுக்கு ஒரு வேளை விரஸமாயிருக்கலாமென்று அஞ்சி, அங்ஙனம் செய்யாது விடுகின்றோம். எனினும், சைவ சித்தாந்திகள் முதலிய எல்லா வகுப்பினருக்கும், தமிழறிவுள்ள அனைவரும் அதை ஆவலுடன் ஆதரவு செய்வார்களென்று உறுதியாக நம்புகிறோம்.

பட்டது. இதன் விளைவாக எழுதப்படிக்கத் தெரிந்தவர்களே மிக அருகிப் போனார்கள். அதிலும் குறிப்பாக வேதங்களும், உபநிடதங் களும் விரல்விட்டு எண்ணக்கூடியவர்களின் சொத்தாகவே இருந்து வந்தன. கிழக்கிந்தியக் கும்பினி கல்கத்தாவில் நிலைகொள்ளத் தொடங் கிய பிறகு இந்தக் கட்டுப்பாடுகள் மேல்சாதியினரால் ஓரளவு தளர்த்திக் கொள்ளப்பட்டன. சொந்த நாட்டு மக்களுக்கு ஈவிரக்கமின்றி மறுக்கப் பட்ட சமற்கிருதக் கல்வியும், வேதப்பயிற்சியும் பசு மாமிசம் தின்னும் பறங்கித் துரைக்குக் கற்பிக்கப்பட்டன. வில்லியம் ஜோன்ஸ், மாக்ஸ் முல்லர், கீத் போன்றவர்கள் இந்நூல்களைப் படித்து மொழிபெயர்க்கும் முயற்சியில் ஈடுபட்டனர். கல்கத்தாவில் நிலைகொண்டிருந்த வெள் ளையர் சிந்துவிலும், கர்நாடகத்திலும், கொங்கணத்திலும், தமிழ்நாட்டி லும் உள்ளவர்கள் சமற்கிருதத்தையே படித்து சங்கர வேதாந்தத்தையே பின்பற்றி வந்தார்கள் என்று நம்பினார்கள். வங்காளத்தில் பிரம்ம சமாஜமும், பிரிக்கப்படாத பஞ்சாபில் ஆரிய சமாஜமும் தலைதூக்கின. பிரம்ம சமாஜம் மேல்நாட்டு நாகரிகம் சார்ந்த இந்தியச் சமய முன்னேற்றத்தை ஏந்திப் பிடித்தது. ஆரிய சமாஜமோ 'மீண்டும் வேதங்களுக்கு' என்று முழங்கியது. இந்தச் சூழ்நிலையில் இந்திய தேசிய இயக்கமும், அதில் ஈடுபட்ட திலகர், அரவிந்தர் போன்றவர் களும் சங்கர வேதாந்தத்தால் ஈர்க்கப்பட்டார்கள். திலகர் இந்து மதமும், சங்கர வேதாந்தமுமே விடுதலைப் போராட்டத்திற்கு அடிப் படையாக அமைய முடியுமென்று உறுதியாக நம்பினார். மாண்டலே சிறையில் அவர் இருந்தபோது பகவத் கீதைக்கு விரிவான உரை ஒன்றை எழுதினார். காயஸ்த வகுப்பைச் சேர்ந்த அரவிந்தர் இளமை யில் வடமொழிப் பயிற்சி இல்லாதவர். அவர் வங்காளத்திலிருந்து தப்பி வந்து புதுச்சேரியில் தலைமறைவு வாழ்க்கை வாழ்ந்தபோது பாரதியார், வ.வே.சு. அய்யர் போன்றோரின் உதவியுடன் வட மொழியைக் கற்பதிலும், ரிக் வேதத்தைப் படிப்பதிலும் ஈடுபட்டார். காயஸ்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் நால்வருணப் பகுப்பின்படி வடமொழியைப் பயில்வதற்குத் தடை இருந்ததனால் இளமையிலேயே அவர் வடமொழியைப் பயிலவில்லை என்பது நினைவிற் கொள்ளத் தக்கது.

இந்தச் சூழ்நிலையில் இவர்களோடு நெருங்கிப் பழகிய வ. உ. சி. சங்கர வேதாந்தத்தில் ஈடுபாடு கொண்டது வியப்பில்லை அல்லவா? தமது சிவஞான போத உரையின் உரைப்பாயிரத்தில்,

> திருவள்ளுவர் திருக்குறள், சிவஞான போதம், கைவல்ய நவநீதம் என்னும் நூல்கள் முறையே நீதி நூல்களிலும், சித்தாந்த நூல் களிலும், வேதாந்த நூல்களிலும் ஒப்புயர்வற்றவையென்பது எனது அபிப்பிராயம்.

என்று எழுதியுள்ளார். அதைப்போலவே இந்த உரையின் பின்னிணைப் பான, 'சிவஞான போத வரலாறு' என்ற பகுதியில் 'சிவஞான போதமும் ஞானவாசிட்டமும்' என்ற உட்தலைப்பின்கீழ் சிவஞான போதத்தின் பன்னிரண்டு நூற்பாக்களையும் ஞானவாசிட்டத்தின் பாடல்களோடு ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

கைவல்ய நவநீதமும், ஞானவாசிட்டமும் சங்கரரின் ஏகான்ம வாதத்தைத் தமிழில் கூறும் நூல்கள். 19ஆம் நூற்றாண்டின் முற் பகுதியில் சங்கரரின் கொள்கைகளைத் தமிழ் மக்கள் நடுவே பரப்பு வதற்கு எழுந்த சில நூல்களிலே இவை இரண்டும் அடங்கும். வ. உ. சி.யின் சிவஞான போத உரை இந்தச் சூழ்நிலையில், இத்தகைய நூல்களை மதிப்பீட்டுக்கும் திறனாய்வுக்கும் உட்படுத்தாமல் எழுதப் பெற்றது.

உரைப்பாயிரத்தில் அவரே கூறியுள்ளபடி, "நாளொன்றுக்கு இரண்டு மணி வீதம் பன்னிரண்டு நாள்களுள் சிவஞான போதத்தை ஆராய்ச்சி செய்து" இவ்வுரையை எழுதி முடித்தார். இவ்வாறு ஆராய்ச்சி செய்ததில் அவருக்குக் "கிடைத்த பலன் சித்தாந்தமும், வேதாந்தமும் ஒன்றே என்ற எனது கொள்கை உறுதியடைந்ததே" என்கிறார். அவருடைய நோக்கத்தை மேலும் தெளிவாக

> நமது நாடு தற்காலம் இருக்கிற ஒற்றுமையற்ற நிலைமையில் மத வேற்றுமைகளையோ, சாதி வேற்றுமைகளையோ, வேறு வேற்றுமைகளையோ காண்பவர்களும், பேசுபவர்களும் தேசத் திற்குத் தீங்கிழைப்பவர்களே என்று யான் கருதுகின்றேன்

என்றும் கூறியுள்ளார். இவற்றிலிருந்து வ. உ. சி. தமது எடுகோளுக்கு ஏற்பத் தம் காலத்தில் ஓங்கி ஒலித்த மிண்டிய மாயாவாதம் எனும் சண்டமாருதத்தின் சுழித்து அடித்த ஆர்ப்பரிப்பின் பாதையிலேயே இழுத்துச் செல்லப்பட்டார் என்பது விளங்கும். ஆதலால் அவருடைய சிவஞான போத உரையும் சங்கரரின் அகம்பிரம்ம வாதத்தினை மேல்வரிச் சட்டமாகக் கொண்டு எழுதப்பட்டதே என்பதும் வியப் பில்லை.

## சிவஞான போதச் சிற்றுரையும் வ. உ. சி.யின் உரையும்

வ. உ. சி.யே தாம் திராவிட மாபாடியம் என்னும் சிவஞான முனிவ ரின் பேருரையைப் பின்பற்றித் தமது உரையை எழுதவில்லை என்றும், சிற்றுரையையே பயின்று எழுதியதாகவும் குறிப்பிட்டுள்ளார். ஆகவே சிவஞான முனிவரின் சிற்றுரையில் இருந்து அவர் விலகி நிற்கும் இடங்களை மட்டும் நாம் ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

சிவஞான போதத்தின் முதற்செய்யுளுக்குச் சிற்றுரையில் 'மங்கல வாழ்த்து' என்றே முனிவர் தலைப்புத் தந்துள்ளார். ஏனெனில் சிவபெருமான் ஒருவனே இறைவன் என்று கொண்டபின் இடையூறு நேராமல் காக்கின்ற விநாயகர் என்ற தெய்வம் தனியாக ஒன்று உண்டு என்று கொண்டால் அது சைவ சித்தாந்தத்தின் ஒரே இறைவன் என்ற அடிப்படைக் கொள்கைக்கு முரண்பட்டதாகிவிடும். மெள்ளப் பல தெய்வம் கூட்டி வளர்த்து வெறும் கதைகள் சேர்த்ததாக முடியும். எனவே அதனை 'மங்கல வாழ்த்து' என்றே சித்தாந்திகள் குறிப்பிட்ட னர். வ.உ.சி.யோ அப்பாடலின் தலைப்பைக் 'காப்பு' என்று குறித்தார். 'பொல்லாத பிள்ளையார் என்னும் பெயரை உடைய கணபதிப் பெருமானை' என்று 'அகல'த்தில் எழுதினார். 'கருத்து' என்ற தலைப்பில் கடவுள் வாழ்த்துக் கூறினார் என்று பொருள் எழுதினார்.

முதல் நூற்பாவிலே 'அகலம்' என்ற பகுதியில்,

> ஆணவம் - 'யான்' என்று நினைத்தல். மலம்-அழுக்கு. 'யான்' என்று நினைத்தல் ஒரு தொழிலாதலால், அது கன்ம மலமாயிற்று. கன்மம் - கருமம் - தொழில். 'யான்' என்று நினைத்ததற்குக் காரணம் சொல்ல முடியாததொன்றாதலால், அது மாயா மலம் என்று சொல்லப்பட்டது. அறிய முடியாத காரணத்தால் வந்ததனை மாயையால் வந்தது எனக் கூறுவது வழக்கு. 'யான்' என்று நினைத்தது யார் எனில், அறிவு சொரூபமாகிய இறைவனே.

என்று எழுதுகிறார் வ. உ. சி. 'சொல்லமுடியாததொன்று' என்பதனாலும், அவ்வாறு பிழைபட நினைத்தவன் 'அறிவு சொரூபமான இறைவனே' என்பதானலும், சிவஞான போதத்திற்கு எளிய நடையில் உரைகாண முற்பட்ட வ. உ. சி. என்கிற சிங்க ஏறு சங்கரரின் அகம் பிரம்மக் கொள்கையின் வலையில் சிக்கி விட்டது. அறிவே சொரூபமான இறைவன் எப்படி அறிவை இழந்தான் என்பது மாயையைச் சங்கரர் 'அநிர்வசனீயம்' என்று குறிப்பிட்டதன் வழியிலேதான் நிகழ்ந்தது. 'உள்ளதென்றும் சொல்ல முடியாது; இல்லையென்றும் சொல்லமுடியாது' என்கின்ற இந்த 'அநிர்வசனீயம்' அறிவார்ந்த தத்துவ இயலுக்கு முரண்பட்டது. சைவ சித்தாந்தம் இந்த 'அநிர்வசனீய' கருத்தைக் கடுமையாகச் சாடுகிறது. அதன் உள்ளீடற்ற தன்மையையும் தோலுரித்துக் காட்டுகிறது.

இரண்டாம் நூற்பாவில் 'அகலம்' என்ற தலைப்பில் இறைவனின் சித்சத்தி என்ற சைவ சித்தாந்தத்தின் கொள்கையை உடன்பட்டே உரை கண்டிருக்கிறார் வ. உ. சி. ஆனால் இறைவனின் சித்சத்தி என்பதைச் சங்கர வேதாந்தம் நிர்குணபிரம்மத்திற்கு உரியதாகக் கொள்வதில்லை என்பதும், மாயையால் விவகாரிக நிலைக்கு இறங்கிய நிலையிலேயே சங்கரரின் மாயாவாதம் இறைவனை உண்டென்று ஏற்றுக்கொள்ளும் என்பதும் கருதற்குரியன.

மூன்றாம் நூற்பாவினால் 'உயிர்' என்ற தனித்த பொருள் உண்டு என்று நிறுவுவதே மெய்கண்டாரின் நோக்கம். சங்கரரின் கொள்கைப் படி உயிர் அல்லது சீவான்மா என்பது இல்லை. மாயையினால் சீவான்மா உள்ளது போலத் தோற்றம் தருகிறது. இந்த இரண்டு கொள்கைகளுக்கும் இடையில் தத்தளிக்கிறார் வ. உ. சி. "ஜீவாத்மாவைச் சரீரம் எவ்வாறு பொருந்திற்று என்பது அறியமுடியாததொன்றாதலால், 'மாயா இயந்திரம்' என்றார்" என்று எழுதுகிறார். இச்சொற்றொடரில் வரும் 'அறியமுடியாததொன்று' என்பது சங்கரர் கூறும் 'அநிர் வசனீயமே'.

இதைப்போலவே நான்காவது நூற்பாவிலும் வ. உ. சி. இடர்ப்படுகிறார். ஆணவ மலம் என்பது தோற்றமில் காலந்தொட்டே உயிர்களைப் பற்றி நின்று அவற்றை அறியாமையில் அழுத்தி அணுத்தன்மைப் படுத்துகின்ற மலம் (அழுக்கு). எனவே அதனை சகச மலம் என்பர். சகசம் என்ற சொல்லுக்கு 'உடன் தோன்றியது' என்பது பொருள். ஆதிசங்கரரின் ஏகான்மவாதம் பிரம்மத்தைத் தவிர வேறுபொருள்

இல்லை என வாதிடுவதால் 'உடன் தோன்றியது' என்று மற்றொரு பொருளை அல்லது பண்பை ஏற்றுக்கொள்ளாது. இந்தச் சிக்கலைப் போக்கவோ என்னவோ, சகஜம் என்ற சொல்லுக்கு உரிய சரியான பொருளாகிய 'உடன் தோன்றியது' என்பதைக் குறிப்பிடாமல் 'இயற்கை' என்று பொருள் கொண்டார் வ. உ. சி. இயற்கை அல்லது இயல்பு என்பது உலகியலில் வழங்குகின்ற பொருள். தத்துவ உலகில் வழங்குவது அன்று. வ. உ. சி. நான்காம் நூற்பாவில் 'அகலம்' என்ற பகுதியில் இவ்வாறு எழுதுகிறார்:

> சகசம் - இயற்கை. ஆணவ மலம் - 'யான்' என்னும் அகங்கார அழுக்கு. ஆத்மா அவ்வழுக்கு அற்றது. ஜீவாத்மா அவ்வழுக்கு உள்ளது. அறிவு சொரூபமாகிய ஆத்மா 'யான்' என்று அகங் கரித்ததால் ஜீவாத்மா ஆயிற்று. அதனாலேயே, ஜீவாத்மாவுக்கு ஆணவ மலம் இயற்கை எனப்பட்டது.

அகம்பிரம்மவாதிகள் இதனை உடன்பட மாட்டார்கள். வ.உ.சி.யின் உரையைப் படித்தால் 'அறிவு சொரூபமாகிய ஆத்மா ஆணவ மலத் தோடு பொருந்தி இருப்பது இயற்கை' என்று பொருள் தந்து முரண் படுவது விளங்கும்.

பழமையில் ஊறிய சைவ சித்தாந்திகள் 'சிவஞான போதம் என்பது ரெளரவ ஆகமத்தின் பாசவிமோசனப் படலத்தின் இறுதியில் உள்ளது' என்பர். இவ்வடமொழிச் சிவஞான போதத்தையே மெய்கண் டார் தமிழில் மொழிபெயர்த்து வார்த்திகப் பொழிப்புரையும் செய்தார் என்றும் வாதிடுவர். தலைமுறை தலைமுறையாக வந்த இந்த நம்பிக்கை இக்கால ஆராய்ச்சி அறிஞர்களால் சான்றுகளுடனும், ஆதாரங்களுட னும் மறுக்கப்பட்டு, 'சிவஞான போதம் தமிழ் முதல் நூலே; மொழி பெயர்ப்பன்று' என்ற கருத்து நிலைநாட்டப்பட்டுவிட்டது. ஆயினும் இன்னமும் இதனை ஏற்றுக்கொள்ளாத அதிதீவிரப் பழமைவாதிகள் உள்ளனர். வ. உ. சி. வடமொழிச் சிவஞான போதத்திலிருந்து மொழி பெயர்க்கப்பட்டதாகச் சொல்லப்படும் ஆறாம் நூற்பாவையே சரி யானது என்று ஏற்றுக்கொண்டு அதன் அடிப்படையிலேயே தமது உரையை அமைத்துள்ளார்.

சிவஞான போதத்திற்கு மிகச்சிறந்த உரையை எழுதிய மாதவச் சிவஞான முனிவரும் தமிழ்ச் சிவஞான போதம் வடமொழி மூலத்தி லிருந்து மொழிபெயர்க்கப்பட்டதே என்ற கருத்தினை உடன்பட்டவர் தாம். முதற்சூத்திரத்தின் முதல் வரிக்கு உரை எழுதும்போதே இந்தக் கொள்கையை முனிவர் வலியுறுத்தியுள்ளார். "அவன், அவள், அது எனும் அவை" என்ற பகுதிக்கு "ஆண் பெண் அலி என்றாற் போலும் உலகத் தொகுதி" என்றே உரை எழுதியுள்ளார். அது என்ற சொல்லுக்கு அஃறிணை ஒருமைச் சுட்டுப்பொருள் கொள்ளவேண்டுமேயன்றி அலி என்று பொருள் கொண்டமை எப்படிப் பொருந்தும்? வடமொழிச் சிவஞான போதச் சூத்திரம் அவ்வாறு பொருள் கொள்ளுமாறு 'நபும்சக' என்ற சொல்லைக் கொண்டிருக்கிறது. அவ்வாறு கொண்டிருப் பதற்கும் ஒரு காரணம் உண்டு. தமிழிலக்கணத்தின்படி ஆண்பால், பெண்பால், பலர்பால், ஒன்றன்பால், பலவின்பால் என்று பால்

வகை ஐந்து எனக் கொள்ளப்படும். ஆனால் வடமொழி இலக்கணத்தின் படியோ புலிங்கம், ஸ்திரிலிங்கம், நபும்சகலிங்கம் என்று மூன்று பால்களே உள்ளன. இதன் விளைவாகத்தான் தமிழ்ச் சிவஞான போதத்தை வடமொழிக்குக் கொண்டுசெல்ல ஆசைப்பட்டவர் 'நபும்சக' என்று சொல்ல நேரிட்டது. மொழிபெயர்ப்பை முதல்நூல் என்று கொண்ட பிற்காலத்தவரும் 'அது' என்ற சொல்லை 'அலி' என்று மொழிபெயர்க்க நேர்ந்தது. சிவஞான போதச் சிற்றுரையில் மாதவச் சிவஞான முனிவரே,

> அவன் அவள் அது எனும் அவை - அவனென்றும் அவளென்றும் அதுவென்றும் இவ்வாறு பகுத்துப் பலவாய்ச் சுட்டி உணரப் படும் சொல்லும் பொருளுமாய இரு கூற்றுப் பிரபஞ்சத் தொகுதி

என்று உரை எழுதினார். ஆனால் அப்போதும் வடமொழிச் சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்புத்தான் தமிழ்ச் சிவஞான போதம் என்ற கருத்தை முனிவர் உதறிவிடவில்லை. அவர் சார்ந்திருந்த திருமடத்தின் கருத்தும் இன்றுவரை அதுவாகத்தான் இருந்து வருகிறது. எனவே கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட முனிவர், தம் கருத்தைக் கைவிட வில்லையாயினும் பெரிதும் வலியுறுத்தாமல் இலைமறைகாயாகவே சொல்லிச் செல்கிறார். பேருரையையும் சிற்றுரையையும் ஒப்புநோக்கிப் படிப்பார்க்கு இது புலனாகும். இவ்வாறு பல இடங்கள் மாற்றம் பெற்றிருப்பதையும் உணர முடியும்.

ஆறாம் நூற்பாவும் அத்தகைய இடங்களிலே ஒன்று என்பதை அவதானிக்கலாம். ஆறாம் நூற்பா, பிரமாண இயல், இலக்கண இயல் ஆகிய இரண்டின் இறுதியிலுள்ள நூற்பா. இதன் கருத்து, "சத்தும், அசத்தும் வரை செய்து உணர்த்துதல் நுதலிற்று" என்பார் ஆசிரியர். இதன் நோக்கம் பதிப்பொருளாகிய சிவபெருமானின் சிறப்பியல்பை உணர்த்துவது ஆகும். சிவஞான முனிவரின் கருத்துப்படி, "பதிப்பொருளுக்குப் பொதுவியல்பு மேற்பெறப்பட்டமையின், ஈண்டுக் கூறும் இலக்கணம் சிறப்பியல்பெனக் கொள்க. அற்றாகலின் அன்றே, இதனை முதற்கண் கூறாது உண்மையதிகாரத்தைச் சாரவைத்து இறுதிக்கண் கூறியதும் என்க" என்பதாகும். அதன் பின்னரும், "வடமொழி ஆறாம் சூத்திரத்தில் ஓதியவாறே 'உணர்உரு அசித்து' எனச் சூத்திரம் செய்யாது 'உணர் உரு அசத்து' எனச் சூத்தரித்தது முதல் நூலோடு முரணும் பிறவெனின், - முரணாது" என்றெழுதி அதையடுத்து இதற்கு அமைதி கூறும் வகையில் மிக விரிவான ஒரு விவாதத்தை முன்வைக்கிறார். இவ்விவாதம் இந்த நூற்பாவின் உரையோடு முடிந்து போகாமல் ஏழாம் நூற்பாவின் உரையோடு முடிவுறுகிறது.

பேருரை பற்றிக் குறிப்பிடுகின்றபோது அந்த உரைப்பகுதி முற்றிலும் கிடைக்கவில்லை என்பதையும், அதில் சில பகுதி க. வச்சிரவேலு முதலியாரால் 1977ஆம் ஆண்டில் வெளியிடப் பெற்றது என்பதையும் முன்பே கண்டோம். அந்தப் பகுதிகூட முழுமைபெறவில்லை என்பதும் வருந்தத்தக்கதே.

வ. உ. சி. இவை யாவற்றையும் படிக்கின்ற வாய்ப்புப் பெற்றிருந்தார் எனில் தமது உரையில், "முந்திய உரையாசிரியர்கள் கொண்ட பாடம் உணர் உரு அசத்து எனின் உணராது இன்மையின் இரு திறன்" என்பது பிழைபட்ட பாடம் எனக் கூறி "உணர் உரு அசித்து எனின் உணராது இன்மையாம், இருதிறன் அல்லது சிவசத்தாம்" என்று எழுதியிருக்க மாட்டாரோ? என்றும் எண்ணத் தோன்றுகிறது.

இதற்கு மேலும் ஆறாம் நூற்பாவின் கருத்துப் பற்றி தடைவிடைகளால் ஆராயப்புகின் அதுவே ஒரு தனி நூல் ஆகிவிடும்.

ஆறாம் நூற்பாவுக்குப் பின் வருகின்ற ஏழு முதல் பன்னிரண்டு வரை ஆகிய நூற்பாக்கள் யாவும் சாதனமும், பயனும் பற்றிக் கூறுவன ஆதலால், அவற்றில் பெரும் வேறுபாடுடைய கருத்துக்கள் எழ முடியாது. எனவே அவற்றையும் தனித்தனி காண வேண்டுவதில்லை.

வ.உ.சி.யின் சிவஞான போத உரை தமிழ்ச் சைவ சித்தாந்தத்தை விடவும் வடமொழி மாயாவாதத்தையே முதன்மைப்படுத்தியது என்றாலும், சங்கரரைப் பின்பற்றியவர்களும் வ.உ.சி.க்கு உரிய மரியாதையையும் சிறப்பையும் கொடுக்கத் தவறினர் என்பது வருந்துதற்குரியது.

இது ஒருபுறமிருக்க பழமையிலே ஊறிய சைவ சித்தாந்திகளும் வ. உ. சி.யின் விரிந்து பரந்த நோக்கையும் நாட்டின் ஒற்றுமையை முதன்மைப்படுத்தி அவர் எழுதியதையும் பேசியதையும் - அதுவும் சிவஞான போதத்தைப் பேசியதையும் - பொறுத்துக்கொள்ள இயலாமல் வ.உ.சி.யைத் தூற்றியே வந்தனர் (இந்நூல் பிற்சேர்க்கை 5). சிவஞான போதச் சிற்றுரைக்கும், சிவஞான சித்தியார் சுபக்கத்திற்கும் விரிவுரை எழுதிய தூத்துக்குடி பொ. முத்தைய பிள்ளை அத்தகையவர்களிலே ஒருவர். அவர் அதி தீவிர சைவ சித்தாந்தவாதி. இவரைப் போன்றவர்களுக்கு, 'முறைப்படி தீக்கை பெறாத வ. உ. சி. எப்படி சிவஞான போதம் பற்றி உரை நிகழ்த்தலாம்? எப்படி சிவஞான போதத்திற்கு உரை எழுதலாம்?" என்று கடுங்கோபம். அதனால் அவர்கள் வ. உ. சி.யைப் பழித்து வந்தனர்.

இவர்களுக்கு மறுமொழி கூறும் வகையில் வ. உ. சி.யின் சிவஞான போத உரையின் முதற்பதிப்பில் 'தீக்கை யாது?' என்ற தலைப்பில் நான்கு வெண்பாக்களை வ. உ. சி. எழுதிச் சேர்த்திருக்கிறார். அதுவும் தவிர அதன் அடிக்குறிப்பாக, "இச் செய்யுள்களின் அச்சுத் தாளைச் சரிபார்த்துக் கொண்டிருந்தபோது சிவஞான பாடியம் 22ம் பக்கத்திலிருந்து பின்வரும் வாக்கியங்கள் கிடைத்தன..." என்று எழுதிவிட்டு பாடியத்திலிருந்து ஒரு பகுதியை மேற்கோளாகவும் எடுத்துக்காட்டியுள்ளார். புரட்சிக் கருத்துக்களிலேயே ஊறித் திளைத்த வ. உ. சி. செட்டிநாட்டிலும், பிற இடங்களிலும் சைவ சித்தாந்தம் பற்றி உரையாற்றி அதன் தொடர்பாகவே திதி முதலிய மூட நம்பிக்கைகளையும் சாடியபோது கடுஞ்சைவர்களால் இதனைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதன் விளைவாகவே தரம் தாழ்ந்த தூற்றுதல்களை வ. உ. சி. மீது வாரிச் சொரிந்தனர். தம் நிலையை விளக்குவதன் பொருட்டு இவ்வெண்பாக்களை வ.உ.சி. எழுதினார்.

சிவஞான மாபாடியத்தில் வ. உ. சி. எடுத்துக்காட்டியுள்ள பத்தியின் தொடக்கத்திலேயே இந்தக் கடுஞ்சைவர்களுக்கு விடையிறுப்பது போல, "இனி, ஒளியானன்றி இருணீங்காதவாறு போல ஆணவமும் ஞானத்தானன்றித் தீக்கைமாத்திரத்தானே நீங்காது" என்றே எழுதி யுள்ளார். மீண்டும் எட்டாம் நூற்பாவில் இதே கருத்தை முதல் அதிகரணத்தில், "தீக்கை செய்துழி அதுவும் ஞானத்தைக் காட்டி யல்லது மோட்சத்தைக் கொடா எனவும் உரைத்துக் கொள்க" என்றும் வலியுறுத்தியுள்ளார். அதற்கு மேலும் வேதம் முதலியவற்றில் விதிக்கப்பட்ட சடங்குகள் "பசித்துண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும், இசைத்து வருவினையில் இன்பம்" என்ற மெய்கண்டாருடைய எடுத்துக் காட்டுச் செய்யுளும் வ.உ.சி.யின் கருத்துக்கே அரண் செய்வதைக் காணலாம்.

கடுஞ்சைவர் நிலை இவ்வாறு என்றால் நடுத்தரச் சைவர் என்று ஆ. இரா. வேங்கடாசலபதியால் கூறப்படும் கூட்டத்தின் நிலை ஒன்றும் கடுஞ்சைவரைவிடப் பரந்த நோக்கம் கொண்டதாகவும், மூடநம்பிக்கை களை ஒழித்துச் சமுதாய முன்னேற்றத்திற்கு உதவுவதாகவும் அமைய வில்லை.

இவ்விருசாராருமே வ. உ. சி.யின் புரட்சிநிறைந்த புதுமைக் கருத்துக் களை ஏற்றுக்கொள்ளும் மனத்திண்மை இல்லாதவர்களே. வ. உ. சி. பிறப்பால் உயர்வு தாழ்வு பாராட்டாத பரந்த நோக்கம் கொண்டவர். சைவ சித்தாந்திகள் என்று தங்களைக் கூறிக்கொண்ட இருவகையின ருமே நால்வருண வேற்றுமையை ஏற்றுக்கொண்டு தாங்கள் அதில் நான்காம் வருணத்தைச் சார்ந்த சூத்திரர்கள் என்பதையும் ஏற்றுக் கொண்டு ஆனாலும் தாங்கள் "சற்சூத்திரர்கள்" என்று நிலை நிறுத்தவே முயன்று வந்தவர்கள்.

சிவஞான போதத்துக்கு மரபு வழியே வந்த பார்வையில் பொருள் கொள்ளாமல் தம்முடைய மெய்யறிவுக்கு ஒத்துவருகின்ற வகையில் உரை எழுதிய வ. உ. சி.யை மரபுவழிச் சைவர்கள் மறுத்துரைப்பதற்கு உரிமை இல்லை. ஏனெனில் சைவ சமயத்தின் சந்தான குரவர்களில் ஒருவரான உமாபதி சிவாச்சாரியார் வ. உ. சி.யின் முன்னோடியாக விளங்குகிறார். அவர் தமது 'சிவப்பிரகாசத்'தின் பாயிரத்தில் கூறுகிறார் :

தெரித்தகுரு முதல்வர்உயர் சிவஞான போதம்
செப்பினர்பின்பு அவர்புதல்வர் சிவஞான சித்தி
விரித்தனர்மற்று அவர்கள்திரு அடிகள்போற்றி
விளம்பியநூல் அவைஇரண்டும் விரும்பிநோக்கிக்
கருத்தில்உறை திருவருளும் இறைவன்நூலும்
கலந்துபொது உண்மைஎனக் கருதியானும்
அருத்திமிக உரைப்பன்வளர் விருத்தம்நூறும்
ஆசில்சிவப் பிரகாசம் ஆகும் அன்றே.

இப்பாடலின் பொருளைச் சுருக்கமாகக் காணலாம். எங்கள் ஆசிரியப் பரம்பரையின் முதலாசிரியராகிய மெய்கண்டார் சிவஞான போதத்தை

எழுதினார். அதன் பின்பு அவருடைய மாணவராகவும் ஞானப்புதல்வ ராகவும் விளங்கிய அருள்நந்தி சிவனார் சிவஞான சித்தியாரை விரிவாக ஆக்கித் தந்தார். அவர்கள் இருவரின் திருவடிகளையும் வணங்கி அவர்கள் இயற்றிய நூல்கள் இரண்டினையும் விரும்பிக் கற்று இறைவன் திருவருளால் என் கருத்தில் உதித்த கருத்துக்களையும் சேர்த்து ஆகம வழியிலே பொது அதிகாரம், உண்மை அதிகாரம் என்ற இரண்டு வகைப்படுத்தி என் ஆர்வத்தினாலே நூறு விருத்தப்பாக் கள் கொண்ட குற்றமற்ற இந்நூலை எழுதினேன். இதற்கு யான் இட்ட பெயர் சிவப்பிரகாசம் என்பதாகும்.

மிகத் தெளிவாகவே உமாபதி சிவம் 'கருத்தில் உறை திருவருளும் கலந்து' என்று சொல்வதை ஊன்றி நோக்குதல் வேண்டும். இத்தோடு அவர் விட்டாரில்லை. இதற்கடுத்த பாடலின் தொடக்கமாக:

தொன்மையவாம் எனும்எவையும் நன்றுஆகா; இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதுஆகா

என்று பழமை பாராட்டுகிறவர்களைப் பொட்டில் அறைந்தாற்போல் கண்டிக்கிறார்.

அப்படியானால் தொடக்கத்தில் வ. உ. சி.யின் சிவஞான போத உரையின் முதல் ஆறு நூற்பாக்கள் சித்தாந்தக் கருத்துக்களை விட்டு விலகி சங்கரரின் மாயாவாதத்தைத் தழுவி நிற்கின்றன என்று திறனாய்வு செய்தது தேவையற்றதா? என்ற கேள்வி எழலாம். தமிழ் நிலத்தில் தோன்றிய சைவ சித்தாந்தத்திலும் பார்க்க சங்கரரின் மாயாவாதம் மிகத் தீவிரமான பழமைவாதம். நால்வருணக் கோட்பாட்டை நிலை நிறுத்துவதற்காகவே மாயாவாதம் தலை யெடுத்தது. அதனோடு அமையாமல் உலகம் உண்மையன்று என்று மறுத்து செயலற்ற பிரம்மமே உண்மையானது என்பதை நிறுவுவது. கொதிக்கும் எண்ணெய்ச் சட்டியிலிருந்து விடுபட நினைத்த புரட்சி வீரர் வ. உ. சி. எரியும் அடுப்பின் நெருப்பினுள்ளேயே விழுந்து விட்டாரே என்ற ஆதங்கத்தில் அப்பகுதி உருக்கொண்டது.

வ. உ. சி.க்கு முன்னோடிகளாக இன்னும் இருவரைக் குறிப்பிடலாம். சமய வேறுபாடுகளிலும், சாத்திரச் சண்டைகளிலும் ஈடுபட்டுக் குறிக் கோளை மறந்து வேதாந்தமா - சித்தாந்தமா? வடகலையா - தென் கலையா? என்பன போன்ற குறுகிய பூசல்களைக் களைந்து பரந்த பார்வையைத் தர விரும்பியவர்கள் தாயுமான அடிகளும், வள்ளல் ராமலிங்கனாரும். தாயுமானவர் வேதாந்த சித்தாந்த சமரசத்தை முன்னெடுத்துச் சென்றார். ராமலிங்க வள்ளலார் சமரச சுத்த சன்மார்க்கத்தை உயர்த்திப் பிடித்தார். இவ்விருவரும் முயன்று பார்த்த நெறியையே வ. உ. சி.யும் தொடர நினைத்தார். அவருடைய முயற்சிகளின் வெற்றி, தோல்வியை இன்றைய தமிழ்ச் சமுதாயம் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டும்.

வ. உ. சி.யின் சிவஞான போத உரை அவருடைய பன்முகப்பட்ட அறிவையும், ஈடுபாட்டையும் எடுத்துக்காட்டும் நூலாக எஞ்சி நிற்கிறது.

இத்தகைய சிறந்த முயற்சியை உலகு மறந்து விடாமலிருக்க இந்நூலை மீண்டும் வெளியிட முன்வந்த வ. உ. சி. சமூக அறிவியல் நிறுவனத்துக்கு நன்றி பாராட்டத் தமிழகம் கடமைப்பட்டுள்ளது. என் பங்கையும் அதில் இணைத்துக் கொள்கிறேன்.





T.N. Loganathan..

# உரைப் பாயிரம்

திருவள்ளுவர் திருக்குறள், சிவஞான போதம், கைவல்லிய நவநீதம் என்னும் நூல்கள் முறையே நீதி நூல்களிலும், சித்தாந்த நூல்களிலும், வேதாந்த நூல்களிலும் ஒப்புயர்வற்றவை யென்பது எனது அபிப் பிராயம். இம்மூன்று நூல்களில் முந்திய இரண்டின் உரைகளுடைய கடின நடையும், பெரிய அளவும் அவற்றைத் தமிழ் மக்கள் கற்பதற்குக் கையில் எடுக்காதவாறு அச்சுறுத்துகின்றன. அவ்வச்சத்தை நிவிர்த்திக் கும் பொருட்டு எளிய நடையிலும் சிறிய அளவிலும் அவற்றிற்கு உரைகள் எழுதவேண்டுமெனப் பல ஆண்டுகளுக்கு முன் நினைத்தேன். பின்னர்த் திருவள்ளுவர் திருக்குறளுக்கு ஓர் உரை எழுதி வெளிப் படுத்தினேன். இப்போது சிவஞான போதத்திற்கு இவ்வுரை யெழுதி வெளிப்படுத்துகின்றேன்.

இவ்வுரையில் ஏனைய உரைகளிற் காணப்படும் பல மதக்கோட் பாடுகளும், அவற்றின் கண்டனங்களும் காணப்படா. அவை காணப் படாமைக்குக் காரணம் மக்கள் பல வேறு பெயர்களோடும், வடிவு களோடும் காணப்படினும் அவர்களெல்லாம் மக்கட் சாதியினரே யாவதுபோல, மதங்கள் பல வேறு பெயர்களோடும் கொள்கைகளோ டும் காணப்படினும் அவைகளெல்லாம் ஒப்புயர்வற்ற ஒரே இறை வனைப் பற்றியே பேசுகின்றன என்று யான் கருதுகின்றமையே. அன்றியும், மத வேற்றுமையைக் காண்பவர்களும், பேசுபவர்களும் "யான்", "எனது" என்னும் மத வெறிபிடித்த மாக்களேயென்றும், நமது நாடு தற்காலம் இருக்கிற ஒற்றுமையற்ற நிலைமையில் மத வேற்றுமைகளையோ, சாதி வேற்றுமைகளையோ, வேறு வேற்றுமை களையோ காண்பவர்களும், பேசுபவர்களும் தேசத்திற்குத் தீங்கிழைப் பவர்களே யென்றும் யான் கருதுகின்றேன். அதனாலும், இவ்வுரையில் யான் பல மதக் கோட்பாடுகளையும், அவற்றின் பொய்யான உயர்வு தாழ்வுகளையும் பற்றி ஒன்றும் பேசவில்லை.

இச்சிவஞான போதத்தின் ஆசிரியரான ஸ்ரீ மெய்கண்ட தேவர் இயற்றியதாகச் சொல்லப்படும் வார்த்திகப் பொழிப்புரையில் பல மதக் கண்டனங்கள் காணப்படுகின்றனவே யென்று வினவின், அவர் இந்நூலை இயற்றிய காலத்திற்குப் பல ஆண்டுகளுக்குப் பின்னர்த் தமிழ்நாட்டில் சில சமயங்கள் புகுந்து ஒரு பெருங்கலக்கத்தை உண்டு பண்ணின வென்றும், அப்போது அச் சில சமயங்களையும் வேறு பல சமயங்களையும் கண்டிக்கக் கருதிப் பிற பல சமயக் கண்டனங் களடங்கிய வார்த்திகப் பொழிப்புரையை இயற்றிச் சிவஞான போதச் சூத்திரங்களோடு சேர்த்தனரென்றும் விடையளித்திடுக.

தமிழ்ச் சிவஞான போதம் வடமொழிச் சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்பெனச் சிலரும், வடமொழிச் சிவஞான போதம் தமிழ்ச் சிவஞான போதத்தின் மொழிபெயர்ப்பென வேறு சிலரும் கூறிவருகின்றனர். அது சம்பந்தமாக யான் இவ்வுரையில் ஒரு முடிவும் கட்ட முற்படவில்லை. தமிழ்ச் சிவஞான போதச் சூத்திரங்களின் சொற்களையும், எனது சொந்த மெய்ஞ்ஞானத்தையும் ஆதாரமாகக் கொண்டும், சிவஞான போதச் சூத்திரங்களுக்கு ஸ்ரீ சிவஞான சுவாமிகள் இயற்றியுள்ள சிற்றுரையின் பிண்டப் பொழிப்புரைகளையும், தமிழகராதியையும் துணையாகக் கொண்டும் இவ்வுரை இயற்றியுள் ளேன். நாள் ஒன்றுக்கு இரண்டு மணி வீதம் பன்னிரண்டு நாள்களுக் குள் யான் சிவஞான போதத்தை ஆராய்ச்சி செய்து இவ்வுரையை எழுதி முடித்தேன். ஆதலால், ஸ்ரீ சிவஞான சுவாமிகள் முதலியோர் களின் உரைகளைப் பற்றி யான் ஆராய்ச்சி செய்யப் புகவில்லை. இவ்வுரை எழுதுவதற்காகச் சிவஞான போதத்தை யான் ஆராய்ச்சி செய்ததில் எனக்குக் கிடைத்த பலன் சித்தாந்தமும், வேதாந்தமும் ஒன்றே யென்ற எனது கொள்கை உறுதியடைந்ததே.

இவ்வுரையில் ஒவ்வொரு சூத்திரத்தின் சாரத்தையும் அதனதன் தலைக் குறிப்பாகவும், சூத்திரத்தின் பொருளை அதன்கீழே பொருள் என்ற சொல்லோடும், இலக்கணக்குறிப்பு முதலியவற்றை அகலம் என்ற சொல்லோடும், கருத்துரையைக் கருத்து என்ற சொல்லோடும் தொடங்கி எழுதியுமுள்ளேன்.

இச்சிவஞான போதவுரையை மதுரை ஸ்ரீ பிரமானந்த சுவாமிகள் மடாலயத்தின் அதிபராகிய ஸ்ரீ சோமசுந்தர சுவாமிகளுடைய தலைமை யில் குறுக்குச்சாலையிலுள்ள திரு. அ. செ. சு. அவர்களுடைய தருமச் சத்திரக் கட்டிடத்தின் முன்பக்கத்திற் கூடிய அவையின்கண் அரங் கேற்றினேன். அப்போது சுவாமிகள் காப்புச் செய்யுளிற் காணும் “மலைவில்லார்” என்பதற்கும், சில சூத்திரங்களின் சில சொற்களுக்கும் அருமையான பொருள்கள் சில உரைத்தார்கள். அவற்றிற் சிலவற்றை இந்நூலில் சேர்த்துள்ளேன். இந்நூலும் வேதாந்த நூல்களும் கூறுவது ஒரே சமயக் கொள்கையாகவே தோற்றுகிறதென்றும், இந்நூலைத் தாம் இனி ஆராய்ச்சி செய்யப் போவதாகவும் சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளினார்கள். சென்னையினின்று வெளியாகும் ‘தினமணி’ அனுபந்தத்தில் இவ்வுரை அரங்கேற்றப்படுவதற்கு முன்னிருந்த நிலை மையில் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

இறைவனையும் உயிரையும் பற்றிப் பேசும் இவ்வருமையான நூலைத் தமிழ் மக்களெல்லாம் படித்தல் வேண்டும், படிக்க முன்வரல் வேண்டும் என்ற ஒரே நோக்கத்துடன் யான் இவ்வுரையை இயற்றி னேன். எனது நோக்கம் இனிது நிறைவேற எல்லாம் வல்ல இறைவன் துணை.



உ

# சிவஞான போதம்

## காப்பு

கல்லா னிழன்மலை
வில்லா ரருளிய
பொல்லா ரிணைமலர்
நல்லார் புனைவரே.

*பொருள்:* கல் ஆல் நிழல் - கல் ஆலமரத்தின் நிழலின் கண்ணே (வீற்றிருக்கும்), மலைவு இல்லார் - உவமை இல்லாதவர், அருளிய - அருளுதற் பொருட்டு, பொல்லார் இணைமலர் - பொல்லாத பிள்ளை யாருடைய இரண்டு தாமரை மலர்போன்ற பாதங்களை, நல்லார் புனைவரே - கற்றோர் (தம் தலையில்) சூடுவரே.

*அகலம்:* அருளிய என்பது 'செய்யிய' என்னும் வாய்பாட்டு வினை யெச்சம். பொல்லாத பிள்ளையார் என்னும் பெயரையுடைய கணபதிப் பெருமானைப் "பொல்லார்" என்றார். மலைவில்லார் என்பதற்கு மலையைவில்லாகவுடையவ ரெனவும் மயக்கம் இல்லாதவ ரெனவும், அருளிய என்பதற்குப் பெற்றருளிய எனவும் உரைப்பினும் அமையும்.

*கருத்து:* தாம் தொடங்கிய நூல் இனிது முடிதற் பொருட்டுக் கடவுள் வாழ்த்துக் கூறினர்.

## முதல் சூத்திரம்
## இறைவன் உண்மை

அவனவ ளதுவெனு மவைமூ வினைமையிற்
றோற்றிய திதியே யொடுங்கி மலத்துளதா
மந்த மாதி யென்மனார் புலவர். 1

*பொருள்:* அவன், அவள், அது என்னும் அவை - (ஐம்பொறிக் காட்சியிற் காணப்படும்) அவன் அவள் அது என்னும் முப்பொருளும்; மூவினைமையின் தோற்றிய திதியே - (தோன்றல், நிற்றல், அழிதல் என்னும்) மூன்று வினையுடைமையோடு தோன்றிய நிலைபேறுடைய பொருள்களே; ஒடுங்கி மலத்து உளதாம் - (அவற்றில் ஒவ்வொன்றும் பின்னர்) மறைந்து (ஆணவ மலம், மாயா மலம், கன்ம மலம் என்னும் மலங்களால் (மறுபடியும்) உளதாகும்; அந்தம் ஆதி என்மனார்

புலவர் - (அவை) தோன்றுதலும், நிற்றலும், ஒடுங்குதலும் இறைவ னிடத்தே என்று கூறுவர் அறிஞர்.

அகலம்: அவன், அவள், அது என்னும் சுட்டுப்பொருள்கள் மூன்றுமன்றி, உலகமென ஒன்று இல்லை யாகலான், "அவனவ ளதுவெனு மவை" என்றார். என்னும் என்பது னகர வொற்றுக் கெட்டு நின்றது. அம் முப்பொருட்கும் உடைமை அம்மூவினைகளே யன்றி வேறில்லை யென்பதை உணர்த்த வேண்டி, "மூவினைமையின்" என்றார். இன் என்பது ஒடு என்னும் பொருள் தந்து நின்றது. திதி - நிலை பேறு. திதியையுடைய பொருள்களைத் திதி என்றார். "திதி" சாதியொருமை. நிலைபேறுடைய - பொறிக்காட்சியில் நிலைத்து நிற்கின்ற. "ஏகாரம்" தேற்றத்தின்கண் வந்தது. ஆணவம் - 'யான்' என்று நினைத்தல். மலம் - அழுக்கு. 'யான்' என்று நினைத்தல் ஒரு தொழிலாதலால், அது கன்ம மலமாயிற்று. கன்மம் - கருமம் - தொழில். 'யான்' என்று நினைத்தற்குக் காரணம் சொல்ல முடியாததொன்றாத லால், அது மாயா மலம் என்று சொல்லப்பட்டது. அறிய முடியாத காரணத்தால் வந்ததனை மாயையால் வந்தது எனக் கூறுவது வழக்கு. 'யான்' என்று நினைத்தது யார் எனில், அறிவு சொரூபமாகிய இறைவனே. மலம் என்பது மூன்றாம் வேற்றுமைத்தொகை; 'அத்து'ச் சாரியை. வறுமையால் இரந்தனன் என்பது, வறுமையைப் போக்கு வதற்காக இரந்தனன் எனப் பொருள் தருதல்போல், "மலத்தால் உளதாம்" என்பது "மலத்தைப் போக்குவதற்காக உளதாம்" எனப் பொருள் தந்து நின்றது. அம் முப்பொருள்களில் ஒவ்வொன்றும் ஒடுங்கி உளதாம் என்பதை உணர்த்தவே, உளதாம் என்று ஒருமையில் கூறினார். அந்தமுறுதல் என்பதற்குத் "தன்னினங்கோடல்" என்னும் உத்தியால் தோன்றலும், நிற்றலும் என்பனவற்றைச் சேர்த்துப் பொருள் உரைக்கப்பட்டது. அறிஞர் என்பது ஈண்டு மெய்ப்பொருளுணர்ந் தோரைக் குறித்து நின்றது.

கருத்து: பொறிக் காட்சிக்குப் புலப்படும் உலகத் தோற்றத்திற்குக் காரணன், அக்காட்சிக்குப் புலப்படாத இறைவன்.

## இரண்டாம் சூத்திரம்

## இறைவனே உலகமாயினன்

அவையே தானே யாயிரு வினையிற்
போக்கு வரவு புரிய வாணையி
னீக்க மின்றி நிற்கு மன்றே. 2

பொருள்: தானே அவையேயாய் - இறைவனே (அவன், அவள், அது என்னும்) அம்முப்பொருள்களேயாய்; இரு வினையின் - (அம் முப்பொருள்களில் பகுத்தறிவுடைய உயிர்கள் செய்யும்) நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளால் ஆணையின் போக்கு வரவு புரிய - (அவ்விறைவன்) சிற்சக்தியால் இறத்தலையும், பிறத்தலையும் செய்ய; நீக்கம் இன்றி நிற்கும் - (இறைவன் அவ்வுயிர்களினின்று) நீங்குதல் இல்லாமல் நிற்பன்.

அகலம்: அன்று, ஏ என்பன அசைகள். பொருட் பொருத்தம் பற்றித் "தானே அவையேயாய்" என்று கொண்டுகூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது. இறைவனன்றி வேறொன்றும் அவையாகத் தோன்று தல் இல்லை யென்பதையும், இறைவன் தோற்றுங்கால் அவையாகவே தோற்றுவனென்பதையும் குறிக்க வந்தமையால், "ஏகாரம்" இரண்டும் பிரிநிலை. உயிர்கள் தாமாகவே இரு வினை புரிகின்றன வென்பதையும் அவற்றின் பயனாகிய இறத்தல், பிறத்தல் முதலியன இறைவன் சிற்சக்தியால் நிகழ்கின்றன வென்பதையும் உணர்த்தும் பொருட்டே "ஆணையின்" என்பதைப் "போக்கு வரவு புரிய" என்பதன்பின் வைத்தனர். உயிர்கள் இரு வினைகளைப் புரியுங் காலத்தும் பிறப்பிறப்பு களை அடையுங் காலத்தும், மற்றெக் காலத்தும் உயிர்களோடு இறைவன் ஒன்றி நிற்கின்றான் என்பதை உணர்த்தவே, "நீக்கமின்றி நிற்கும்" என்றார்.

கருத்து: இறைவனே அவன், அவள், அது வாகி அவற்றுடன் என்றும் ஒன்றி நிற்கின்றான்.

## மூன்றாம் சூத்திரம்

## உயிரின் உண்மை

உளதில தென்றலி னெனதுட லென்றலி
னைம்புல னொடுக்க மறிதலிற் கண்படி
லுண்டிவினை யின்மையி னுணர்த்த வுணர்தலின்
மாயா வியந்திர தனுவினு ளான்மா. 3

பொருள்: இலது என்றலின் - (காட்சியில் உயிர்) இலது என்றலின்; எனது உடல் என்றலின் - என்னுடைய உடம்பு என்றலின்; ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் - ஐம்பொறிகளுடைய ஒடுக்கத்தை அறிதலின்; கண்படில் உண்டிவினை இன்மையின் - உறங்கினால் உணவும் தொழி லும் இல்லாமையின்; உணர்த்த உணர்தலின் - (ஒரு பொருளை) அறிவிக்க அறிதலின்; மாயா இயந்திர தனுவுள் - மாயமாக வந்த (ஓர்) இயந்திரம் (எனச் சொல்லத்தக்க) கருவி(யாகிய உடம்பி)னுள்; ஆன்மா உளது - உயிர் உள்ளது.

அகலம்: 'இலது என்றல்' முதலிய ஐந்து செயல்களால் மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என்று கொண்டு கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது. என்றலின் - என்று கூறுதலின். காட்சியில் உயிர் இலது என்று கூறுங்கால் காட்சிக்கு அப்பாற்பட்டு உயிர் உளது என்றல் பெறப்பட்டது. ஈண்டு ஆன்மா என்பது ஜீவான்மா என்னும் பொருளில் வந்தது. ஜீவான்மா, ஜீவன், உயிர் என்பன ஒரு பொருட் கிளவிகள். கிளவி - சொல். ஜீவான்மா என்பது 'யான்' என்னும் அகங்காரத்தைப் பொருந்திய அறிவு. ஆன்மா என்பது 'யான்' என்னும் அகங்காரத்தைப் பொருந்தாத அறிவு. "யான்" என்னும் ஜீவான்மா எனது உடம்பு என்கின்றது; அஃதே ஐம்பொறி களின் ஒடுக்கத்தை அறிகின்றது; அஃதே உணர்த்த உணர்கின்றது; அஃதே நனவில் உண்டி வினை கொள்கின்றது. புலன் - விஷயம்.

புலன் என்பது ஈண்டு ஆகு பெயராய் அதனைப் பற்றும் பொறிக்கு ஆயிற்று. ஐம்பொறிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி. ஐம்புலன் கள் - ஐம்பொறிகள் முறையே பற்றும் ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை. ஐம்பொறி ஒடுக்கம் - ஐம்பொறிகள் தொழில் புரியா தொடுங்கி இருத்தல். ஐம்பொறிகளும் முறையே தத்தம் புலன்களைப் பற்றா திருத்தலை ஐம்பொறியொடுக்க மென்றார். ஐம்பொறிகள் ஐம்புலன் களைப் பற்றாதிருத்தல் சொர்ப்பனத்திலும், சுழுத்தியிலும் நிகழ்தல் போல ஜாக்கிரத்திலும் நிகழ்தல் கூடும். ஒருவன் ஒரு பொருளைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்துக்கொண்டிருக்குங்கால், அவனது பொறிகள் அவற்றின் புலன்களைப் பற்றுதல் இல்லை. ஆனால், சொர்ப்பனத்திலும், சுழுத்தியிலும் பொறிகள் புலன்களைப் பற்றாத தன்மையை அவை நீங்கிய பின்னரே அறிதல் போல, ஜாக்கிரத்தில் பொறிகள் புலன்களைப் பற்றாத தன்மையை ஆழ்ந்த சிந்தனை நீங்கிய பின்னரே ஒருவன் அறிதல் கூடும். ஜீவர்கள் ஜாக்கிரத்தில் உணவும் தொழிலும் கொள்ளு தலும், சொர்ப்பனத்திலும் சுழுத்தியிலும் அவற்றைக் கொள்ளாதிருத்த லும் இயல்பாகையால், "கண்படில் உண்டி வினையின்மை" என்றார். நனவு - ஜாக்கிரம்; கனவு - சொர்ப்பனம்; உறக்கம் - சுழுத்தி. அறிவிக்க அறிதல், ஒவ்வொருவருக்கும் அனுபவம். ஜீவாத்மாவைச் சரீரம் எவ்வாறு பொருந்திற்று என்பது அறியமுடியாத தொன்றாதலால், "மாயா இயந்திரம்" என்றார். உடம்பு பல தொழில்களைச் செய்யும் பல உறுப்புக்களைக் கொண்டிருத்தலால், அதனை "இயந்திரம்" என்றார். உடம்பு பல உறுப்புக்களையுடைய இயந்திரம் போன்றதாயி னும், அது பல உறுப்புக்கள் இல்லாத ஒரு சாமான்ய கருவி போல உபயோகப்படத் தக்கதாயும் இருத்தலின், அதனைத் தனுவென்றுங் கூறினார். தனுவினுள் என்பதில் இன் சாரியை.

கருத்து: இல தென்றல் முதலிய செயல்களைச் செய்வதால், உயிர் உடம்பில் உளது.

## நான்காம் சூத்திரம்

## உயிரின் தன்மை

அந்தக் கரண மவற்றினொன் றன்றவை
சந்தித்த தான்மா சகசமலத் துணரா
தமைச்சா சேய்ப்பதின் றைத்தவத் தைத்தே. 4

பொருள்: ஆன்மா அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்று - உயிர் அந்தக்கரணமாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும் அவற்றுள் ஒன்று அன்று; அவை சந்தித்தது - அவற்றோடு கூடியது; சகச மலத்து உணராது - இயற்கையான (ஆணவ மலத்தினால் பொருள் களை உள்ளபடி) அறியாது; அரசு அமைச்சு ஏய்ப்ப நின்று ஐந்து அவத்தைத்து - அரசன் அமைச்சரோடு கூடி நிற்றல் ஒப்ப (அந்தக் கரணங்களோடு கூடி) நின்று (பொருள்களை உணர்ந்து ஜாக்கிரம், சொர்ப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும்) ஐந்து அவத்தைகளை உடையது.

அகலம்: "ஏகாரம்" ஈற்றசை. அவை என்பது மூன்றாம் வேற்றுமைத் தொகை. ஆன்மா என்னும் எழுவாய் அன்று, சந்தித்தது, உணராது, அவத்தைத்து என்னும் நான்கு பயனிலைகளைக்கொண்டு நின்றது. சகசம் - இயற்கை. ஆணவ மலம் - 'யான்' என்னும் அகங்கார அழுக்கு. ஆத்மா அவ்வழுக்கு அற்றது. ஜீவாத்மா அவ்வழுக்கு உள்ளது. அறிவு சொரூபமாகிய ஆத்மா 'யான்' என்று அகங்கரித்ததால், ஜீவாத்மா ஆயிற்று. அதனாலேயே, ஜீவாத்மாவுக்கு ஆணவ மலம் இயற்கை என்னப்பட்டது. மனம் - நினைக்கும் சக்தி. புத்தி - அதுவா, இதுவா என்று ஐயமுற்றவிடத்து அவ்விரண்டில் ஒன்று என்று நிச்சயிக்கும் சக்தி. அகங்காரம் 'யான்' என்று எழும் சக்தி. சித்தம் - விரும்பும் சக்தி. அவத்தை - நிலை. ஜாக்கிரம் - நனவு - ஐம்பொறிகளோடும் மனத்தோடும் சேர்ந்து ஜீவாத்மா தொழில்செய்யும் நிலை சொர்ப்பனம் - கனவு - ஐம்பொறிகளை விடுத்து மனத்தோடு மாத்திரம் சேர்ந்து ஜீவாத்மா தொழில்செய்யும் நிலை. சுழுத்தி - ஐம்பொறிகளையும் மனத்தையும் விடுத்து ஜீவாத்மா தொழில்செய்யும் நிலை. துரியம் - ஜீவாத்மா மனம் (நினைப்பு) எழாமல் பார்த்துக்கொண்டிருக்கிற நிலை. இதனை விகற்ப சமாதி என்பர். துரியாதீதம் - ஜீவாத்மா அறிவாகவே, அஃதாவது தான் தானாகவே நிற்கும் அல்லது தொழில் செய்யும் நிலை. இதனை முறையே நிர்விகற்ப சமாதியென்றும், நனவிற் சுழுத்தி யென்றும் சொல்வர்.

கருத்து: ஜீவாத்மா அந்தக்கரணத்தோடு கூடி ஐந்து அவத்தைகள் உறும்.

## ஐந்தாம் சூத்திரம்

## பொறிகளுடன் உயிர் இறைவனை அறியாது

விளம்பிய வுள்ளத்து மெய்வாய் கண்மூக்
களந்தறிந் தறியா வாங்கவை போலத்
தாந்த முணர்வின் றமியருள்
காந்தங் கண்ட பசாசத் தவையே. 5

பொருள்: விளம்பிய வுள்ளத்து மெய் வாய் கண் மூக்கு (செவி) - (மேற்) கூறிய உயிருடன் கூடிநின்ற மெய், வாய், கண், மூக்கு, செவி (என்னும் ஐம்பொறிகளும்); அளந்து அறிந்தும் அறியா - (தத்தம் புலன்களை) அளவிட்டு அறிந்தும் (உயிரை) அறியமாட்டா. அவைபோல - அப்பொறிகள்போல; தாம் தம் உணர்வின் தமி அருள் (அறியா) - உயிர்கள் தமது அறிவால் இறைவனது சிற்சத்தியை அறியமாட்டா; காந்தம் கண்ட பசாசத்தவை - காந்தத்தைக் கண்ட இரும்பின் (தன்மையைப் போல இறைவன் சந்நிதானத்தில் பொறிகளை அறியும்) தன்மையை உடையன.

அகலம்: உள்ளத்து என்பதன் 'அத்து'ச் சாரியை. உள்ளம் - ஆன்ம புருடன் - உயிர். முந்திய சூத்திரத்தில் கூறப்பட்டது அஃதே. செவி என்பது சொல்லெச்சம். சொல்எச்சம் - சொல் எஞ்சி (குறைந்து) நிற்றல். பொறிகள் அறிதல் தத்தம் புலன்களையே யாதலால், புலன் களை என்று விதந்து கூறிற்றிலர். உம்மை விகாரத்தால் தொக்கது.

ஆங்கு என்பது அசை. தமி - ஒப்பின்மை; அஃது ஈண்டு ஆகு பெயராய் ஒப்பில்லாத இறைவனுக்கு ஆயிற்று. அறியா என்பது சொல்லெச்சம். 'ஏகாரம்' ஈற்றசை.

கருத்து: உயிர் பொறிகளோடு கூடி நிற்பதால் இறைவனை அறியாது.

## ஆறாம் சூத்திரம்

## இறைவன் சொரூபம்

உணருரு வசித்தெனி னுணரா தின்மையா
மிருதிற னல்லது சிவசத் தாமென
விரண்டு வகையி னிசைக்குமன் னுலகே. 6

பொருள்: உணர் உரு என்னின் அசித்தாம் - (இறைவனது சொரூபம்) (உயிர்) சுட்டி அறியும் சொரூபம் என்றால் (உயிர் அறியும் உலகப் பொருள் போல) அறிவில் பொருளாம்; உணராது (எனின்) இன்மை யாம் - (உயிர் எவ்வாற்றானும்) அறியாத சொரூபம் என்றால் (முயற் கொம்புபோல) இல் பொருளாம்; இருதிறன் அல்லது சிவ சத்தாம் - (இவ்) இரண்டு தன்மையும் அல்லாத(தாகிய) சித் சத்தாம்; என இரண்டு வகையின் இசைக்கும் உலகு - என்று இரண்டு தன்மையோடு (கூடிய சொரூபமாக) உயர்ந்தோர் கூறுவர்.

அகலம்: முந்திய உரையாசிரியர்கள் கொண்ட பாடம் "உணருரு வசத்தெனி னுணராதின்மை யினிரு", வடமொழிச் சூத்திரத்தையும், பொருட் பொருத்தத்தையும் நோக்க இப்பாடம் பிழைபட்ட பாடம் என்பது நன்கு தெரியும். "ஏகாரம்" ஈற்றசை. முன் சூத்திரத்தில் (தமி) இறைவன் கூறப்பட்டிருத்தலால், இச் சூத்திரத்தில் உரு என்பதை இறைவனது உரு என்று கொள்ளப்பட்டது. என்னின் என்பது னகர வொற்றுக் கெட்டுநின்றது. அஃது உணராது என்பதுடனும் ஆம் என்பது அசித்து என்பதுடனும் கூட்டி உரைக்கப்பட்டன. உணர் என்பது வினைத்தொகை. அசித்து - ஜடம். உணராது, இல்லது என்பன முறையே உணராதது, இல்லாதது என்னும் பொருள் தந்து நின்றன.

"உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே" என்றமையால், உலகம் என்பதற்கு உயர்ந்தோர் எனப் பொருள் உரைக்கப்பட்டது. சித் - அறிவு. சத் - உண்மை. ஆகவே, சித் சத் என்பது அறிவாகிய உண்மைப் பொருள். தீ சுடும் ஒளியுமாகிய இரண்டு தன்மைகளை உடைய பொருளா யிருத்தல்போல, இறைவன் அறிவும் உண்மையுமாகிய இரண்டு தன்மைகளை உடையவன். "மன்" அசை. அஃது ஈண்டு ஒழியிசைக்கண் வந்தது. "ஏகாரம்" ஈற்றசை.

கருத்து: இறைவன் அறிவாகிய உண்மைப்பொருள்.

## ஏழாம் சூத்திரம்

## உயிர் இரண்டு வகை அறிவுள்ளது

யாவையுஞ் சூனியஞ் சத்தெதி ராகலிற்
சத்தே யறியா தசத்தில தறியா
திருதிற னறிவுள திரண்டலா வான்மா. 7

நின்று உண்மையாராய்ச்சி செய்யாதிருக்கும் எனது ஆஸ்திக சகோதரர் களுக்குச் சில வார்த்தைகள் சொல்லுகிறேன்.

இவ்வுலகத்திலுள்ள ஆஸ்திக சமயத்தார்களெல்லாம் தத்தம் சமயக் கடவுள் சர்வ சக்தியும், சர்வ ஞானமும், சர்வ வியாபகமும் உள்ளவ ரென்று ஒப்புக் கொள்கின்றனர். அவ்வாறு ஒப்புக் கொண்டும், ஒவ்வோர் ஆஸ்திக சமயத்தினரும், தத்தம் சமயமே மெய்யான அல்லது உயர்ந்த சமயமென்றும், தத்தம் சமயக் கடவுளே மெய்யான அல்லது உயர்ந்த கடவுளென்றும், மற்றைய சமயங்களெல்லாம் பொய்யான அல்லது தாழ்ந்த சமயமென்றும், மற்றைய சமயக் கடவுளெல்லாம் பொய்யான அல்லது தாழ்ந்த கடவுளென்றும் கூறி வேறுபடுகின்றனர்.

சர்வ சக்தியும், சர்வ ஞானமும், சர்வ வியாபகமும் உள்ள பொருள் ஒன்றுதான் இருக்க முடியுமேயன்றி, ஒன்றற்குமேல் இருக்க முடியாதென்பது அறிவுடைய ஒவ்வொருவரும் ஒப்புக்கொள்ளத்தக்க உண்மை. ஆகவே, ஒவ்வொரு சமயத்தினரும் தத்தம் சமயக் கடவுளே மெய்யான அல்லது உயர்ந்த கடவுளென்றும், மற்றைய சமயக் கடவுளெல்லாம் பொய்யான அல்லது தாழ்ந்த கடவுளென்றும் கூறுவதற்குக் காரணம் என்னவென்று ஆராய்ந்து பார்க்கும்போது, ஒவ்வொரு சமயத்தினரும் தத்தம் சமயக் கடவுளுடைய பெயரும் வடிவும் மற்றைய சமயக் கடவுளுடைய பெயரோடும் வடிவோடும் வேறுபட்டிருக்கக் காண்டலேதான் காரணம் என்று தெரிகின்றன.

பெயரும், வடிவும், நாம் நமது பொறிகளால் நமது காட்சியில் காணும் கல், மண் போன்ற பொருள்களும் அல்ல; நமது உணர்ச்சியால் காணும் வலி (சக்தி), அறிவு (சித்து) போன்ற பொருள்களும் அல்ல. பெயரும் வடிவும் ஒவ்வொரு சமயத்தையும் கண்டுபிடித்த ஆசிரியர் களாலும், அவர்களைப் பின்பற்றியோர்களாலும் அவரவர் உள்ளத் திற்கும் செவிகளுக்கும் கண்களுக்கும் இயைந்தவாறு கற்பிக்கப் பட்டவைகளே. இப்பெயர்களும் வடிவுகளும் நம்மாலும் கற்பிக்கப்படத் தக்கவையே. இக்கற்பிதமான பெயர்களையும், வடிவுகளையும் நீக்கி விட்டுப் பார்த்தால், ஒவ்வொரு சமயக் கடவுளிடத்தும் அவரவர் கொள்கைப்படி உள்ளது சர்வ சக்தியும், சர்வ ஞானமும், சர்வ வியாபகமுமாகிய ஒன்றே.

ஒவ்வொருவனுக்கும் தன்தன் மகனிடத்தில் அதிகப் பிரியம் உண்டு. ஒருவன் தன் மகனை "மகனே" என்று அழைத்து, அவனுக்கு வெள்ளை வேஷ்டி கட்டி அவன் நெற்றியில் சந்தனப் பொட்டிட்டு அவனைப் பேணுகிறான். அவன் வீட்டிற்குக் கீழ வீட்டுக்காரன் முந்தியவனுடைய மகனையே "மைந்தனே" என்று அழைத்து, அவனுக்குச் சிவப்புப்பட்டுக் கட்டி அவன் நெற்றியில் குங்குமப் பொட்டிட்டுப் பேணுகிறான். அவன் வீட்டிற்கு மேல வீட்டுக்காரன் முந்தியவனுடைய மகனையே "குழந்தாய்" என்று அழைத்து, அவனுக்குச் சட்டை போட்டு அவன் நெற்றியில் சாந்துப் பொட்டிட்டுப் பேணுகிறான். முந்தியவன் தன் மகனைத் தான் அழைத்த "மகனே" என்ற பெயரால் அல்லாமல் தன் பக்கத்து வீட்டுக்காரர் என்னை "மைந்தனே", "குழந்தாய்" என்ற

பெயர்களால் அழைத்ததற்காகவாவது, தன் மகனுக்குத் தான் கட்டிய வெள்ளை வேஷ்டியும் தான் இட்ட சந்தனப் பொட்டும் அல்லாமல் தன் வீட்டிற்குக் கீழ வீட்டுக்காரன் சிவப்புப் பட்டுடுத்தியும் சந்தனப் பொட்டிட்டும், தன் வீட்டிற்கு மேல வீட்டுக்காரன் சட்டை போட்டும் சாந்துப் பொட்டிட்டும் அழகுபடுத்தியதற்காகவாவது துன்பம் அடைவானா? அவன் துன்பம் அடைய மாட்டான். அதற்கு மாறாக, தன் பக்கத்து வீட்டுக்காரர் தன் மகன்மீது கொண்டுள்ள அன்பு காரணமாக அவருக்குப் பிரியமான பெயர்களை இட்டழைத்ததற்காகவும் அவருக்குப் பிரியமானபடி அலங்காரம் செய்து பேணியதற்காகவும் அவன் அவ்விருவரையும் மிக நேசிப்பான்.

மேற்கண்டபடியே, தம் கடவுளுக்கு ஒரு சமயத்தார் தம் பிரியப்படி ஏற்படுத்தியுள்ள பெயரையும் வடிவையும் விடுத்து, அக்கடவுளுக்கே வேறு சமயத்தார்கள் தங்களுக்குப் பிரியமான வேறு பெயர்களையும் வடிவுகளையும் ஏற்படுத்தி வணங்குகின்றார்கள் என்று கொள்ளின், முந்திய சமயத்தார் பிந்திய சமயத்தார்களிடத்து வேற்றுமை காட்டாது அன்பு பாராட்டுவர். இவ்வாறே, ஒவ்வொரு சமயத்தினரும் தத்தம் கடவுளையே மற்றைய சமயத்தினர்கள் அவரவர்களுக்குப் பிரியமான பெயர்களாலும் வடிவுகளாலும் வணங்குகின்றார்கள் என்று கொள்ளல் வேண்டும். அவ்வாறு கொள்ளுங்கால், பல சமயத்தார்களும் ஒரே கடவுளையே அவரவர்களுக்கு இஷ்டமான பெயர்களாலும் வடிவு களாலும் வணங்குகின்றார்கள் என்றும், அவர்கள் சமயக் கடவுளும் சமயமும், அவரவர்களால் கற்பிக்கப்பட்ட பெயரளவாலும் வடிவள வாலும் வெவ்வேறாகத் தோன்றுதலின்றி உண்மையில் வேறுபாடு இல்லையென்றும், பல சமயங்களும் ஒரே கடவுளைப் பற்றி நிற்கின்ற மையால் பல சமயங்களும் பெயரளவால் வெவ்வேறாகத் தோன்றினும் உண்மையில் ஒன்றேயென்றும் கண்டு பேரின்பம் அடைவார்கள். அது பற்றியே "எம்மதக் கடவுளும் தம்மதெனக் கொளல்" என்று கூறப்பட்டுள்ளது. இதனை யாவரும் கடைப்பிடித்து ஒழுகுவாராக. கடவுள் துணை.

1935ஆம் ஆண்டுக் *குமரன் வருஷ அனுபந்தத்தில்* 'உண்மையில் சமயங் களெல்லாம் ஒன்றே' என்ற தலைப்பில் வ. உ. சி. ஒரு கட்டுரை எழுதி யுள்ளதாகத் தெரிகிறது (*சுதேசமித்திரன்*, 5 அக்டோபர் 1935, மதிப்புரை). பதிப்பாசிரியர் பார்வைக்குக் *குமரன் வருஷ அனுபந்தம்* கிடைக்கவில்லை. வ. உ. சி. சுப்பிரமணியம் அவர்கள் பார்வையிடக் கொடுத்த கையெழுத்துப் படியிலிருந்து (இதன் இறுதியில் 'தூத்துக்குடி, 30.7.1935' எனக் குறிக்கப் பட்டுள்ளது) அதே தலைப்பிலான கட்டுரை இங்குப் பதிப்பிக்கப் படுகிறது. இரண்டு கட்டுரைகளும் ஒன்றே எனத் தோன்றுகிறது.

சிவஞான போத உரைக்கு வ.உ.சி. எழுதியுள்ள 'சிவஞான போத வரலாறு' என்ற பின்னுரையின் இறுதியில் 'சிவஞான போதச் சிற்றுரை யால் யான் கண்ட உண்மை' என்ற பகுதியும் இக்கட்டுரையும் பல இடங்களில் ஒத்து இருக்கின்றன. உரை முடிவில் எழுதிய பின்னுரை யைத் தழுவித் தனிக்கட்டுரையாக வ. உ. சி. இதனை அமைத்துள்ள தாகத் தெரிகிறது.



பிற்சேர்க்கை 4

# கடவுளைக் காண்டல்

கடவுளைக் காணமுடி யாதென்பர் கண்ணால்
கடவுளையான் காண்கின்றேன் பண்ணால் – கடவுள்
மனம்வாக்கிற் கெட்டா னெனமொழிவ ரீண்டென்
மனம்வாக்கிற் கெட்டுகின்றான் மன்.

கடவுள் என்னும் சொல் கட என்னும் பகுதியும் உள் என்னும் விகுதியும் சேர்ந்தாயது. கட என்பதற்குக் கடப்பாய் என்பது பொருள். உள் என்பது தொழிற்பெயர் விகுதி. ஆகவே, கடவுள் என்பது கடத்தல் என்று பொருள்படும். அஃது ஈண்டு தொழிலாகுபெயராய்க் கடந்து நிற்கும் பொருளுக்கு ஆயிற்று. கடந்து நிற்கும் பொருள் என்னும்போது, 'எதனை அல்லது எவற்றைக் கடந்து நிற்கும் பொருள்' என்ற ஒரு வினா எழுகின்றது. அதற்குப் பொறிகளையும், சொற்களையும், உள்ளத்தையும் கடந்து நிற்கும் பொருள் என்று ஆன்றோர் விடையளிக்கின்றனர். அஃதாவது, பொறிகளாலேனும், சொற்களாலேனும், உள்ளத்தாலேனும் அறியமுடியாத பொருள் கடவுள் என்பதாம். உயிர் என்பது 'யான்' என்னும் ஆணவத்தோடு கூடிய அறிவு. கடவுள் என்பது 'யான்' என்னும் ஆணவம் இல்லாத அறிவு. பொறிகள் - மெய், வாய், கண், மூக்கு, செவி. சொற்கள் - ஒருவன் சொல்லும் சொற்கள். உள்ளம் - ஒருவன் நினைக்கும் நினைப்பு. கடவுள், பொறி, சொல், உள்ளம், உயிர், அறிவு என்பவற்றை வடமொழியாளர் முறையே பிரமம், ஞானேந்திரியம், வாக்கு, மனம், ஜீவன், சித்து என்பர்.

இவ்வுலகப் பொருள்களில் பெரும்பாலானவற்றில் ஒரு வடிவும், ஓர் ஓசையும், ஒரு சுவையும், ஒரு நாற்றமும், ஓர் ஊறும் அமைந்துள் ளன; அவ்வைந்துக்கும் ஆதாரமான ஒரு பொருளும் அமைந்துள்ளது. வடிவு - ரூபம். ஓசை - சத்தம். சுவை - ருசி. நாற்றம் - வாசனை. ஊறு - ஸ்பரிசம். பொருள் - வஸ்து. உதாரணமாக ஒரு கல் துண்டை எடுத்துக் கொள்வோம். அதில் ஒரு வடிவும், ஓர் ஓசையும், ஒரு சுவையும், ஒரு நாற்றமும், ஓர் ஊறும் அவ்வைந்திற்கும் ஆதாரமான ஒரு பொருளும் அமைந்துள்ளன. அவ்வைந்தும் முறையே ஐம்பொறி களில் ஒவ்வொன்றால் அறியப்படுவன. ஆதலால், அவ்வைந்தும் புலன்கள் எனப்படும். அவ்வைந்திற்கும் ஆதாரமான பொருள் பொறி களாலாவது, உள்ளத்தாலாவது அறியப்படாதது. அதனை மெய்ப் பொருள் என்பர் ஆன்றோர். உலகப் பொருள்களிலும் நமது பொறிகள் சிலவற்றாலும், நமது பொறிகளில் ஒன்றாலும் அறியமுடியாதவையும்

உண்டு. உதாரணமாக காற்று நமது மெய் தவிர மற்றைய நான்கு பொறிகளாலும் அறியமுடியாதது. ஆகாயம் நமது ஐம்பொறிகளில் எஃதாலும் அறியமுடியாதது. இவ்வாகாயம் ஆங்கில மொழியில் 'ஈதர்' (*Ether*) எனப்படும். இஃது ஸ்தூல உலகில் எங்கும் ஸ்தூலப் பொருள் எஃதிலும் நிறைந்துள்ள பொருள்.

கடவுள் அறிவுப் பொருள். அறிவுப் பொருளை வடமொழியாளர் சித்சத் என்பர். அஃது எங்கணும் நிறைந்துள்ள நுண்ணிய பொருள். நுண்ணிய = பொறிகளாலாவது உள்ளத்தாலாவது அறியப்படாத. நுண்ணிய என்பதற்கு எதிர்மறை கனத்த. கனத்த = பொறிகளாலாவது உள்ளத்தாலாவது அறியப்படுகிற. நுண்ணிய பொருளை அருவப் பொருள் எனவும், கனத்த பொருளை உருவப் பொருள் எனவும் கூறுவர். கனத்த பொருள் கண்டமாயிருக்கும். நுண்ணிய பொருள் அகண்டமாயிருக்கும். கண்டம் = ஓர் அளவுக்கு உட்பட்டது. அகண்டம் = ஓர் அளவுக்கு உட்படாமல் எங்கும் வியாபித்துள்ளது. ஆதலால், கண்டப் பொருள்கள் ஈங்குப் பல இருத்தல் கூடும்; அகண்டப் பொருள் ஒன்றே இருத்தல் கூடும். ஓர் இடத்தில் ஒரு காலத்தில் ஒரு பொருளுக்கு மேல் இருத்தல் முடியாததுபோல, எங்கும் வியாபித்துள்ள பொருள் ஒன்றற்குமேல் இருத்தல் முடியாது. பொறிகளுக்குப் புலப்படாத மனமும், உயிரும் கண்டப் பொருள்களா, அகண்டப் பொருள்களா என வினவின், அவை நுண்ணிய பொருளாதலால் அகண்டப் பொருளேயாம். ஆயின், மனமும், உயிரும் இரண்டு பொருள்களா என்னின், அகண்டப் பொருள் ஒன்றற்கு மேல் இருத்தல் முடியாதென்பது மேலே கூறப்பட்டுள்ளது. ஆதலால் மனமும், உயிரும் இரு பொருள் போல் தோன்றினும், உண்மையில் ஒரு பொருளே. அவை எப்படி ஒரு பொருளாகும்? மனம் என்பது நினைப்பு; உயிர் என்பது அறிவு. நினைப்பும் அறிவும் ஒன்றாகுமா? என்று வினவின், அறிவே நினைக்கின்றது; அந்நினைப்பு அவ்வறிவின் செயல்; ஆணவத்தோடு கூடிய அறிவை உயிர் எனவும், அறிவின் நினைப்பை மனம் எனவும் நாம் சொல்லுகிறோமே யல்லாமல், உண்மையில் மனம் என்று ஒரு பொருள் இல்லை; அஃது அறிவின் செயலேயாம் என்க. அதாவது, நினைத்தல் அறிவின் செயல். இதனை அறிவின் இயல் என்றும் கூறுவர். இதுகாறும் கூறியவற்றால் மனம் என்று ஒரு பொருள் இல்லையென்பதும், அஃது அறிவின் செயல் அல்லது இயல் என்பதும், உயிர் அகண்டப் பொருளே யென்பதும் பெற்றாம்.

கடவுள் நுண்ணிய அகண்டப் பொருள் என்று கூறப்பட்டது; உயிரும் நுண்ணிய அகண்டப் பொருள் என்று கூறப்பட்டது; நுண்ணிய அகண்டப் பொருள் ஒன்றுதான் இருக்க முடியும் என்றும், ஒன்றற்கு மேல் இருக்க முடியாதென்றும் கூறப்பட்டது. கடவுளும் உயிரும் ஒன்றா? கடவுள் சர்வ வியாபகமும், சர்வ சக்தியும், சர்வ ஞானமும் உள்ள பொருளென்று பெரியார் கூறுகின்றனரே; உயிரோ ஓர் உடலளவைப் பற்றிய வியாபகமும், சக்தியும், ஞானமும் உள்ள பொருளென்று நாம் உணர்கின்றோமே; அவை இரண்டும் எப்படி ஒன்றாயிருத்தல் முடியும்? என்று வினவின், அவ்விரண்டும் சொல்லளவில் இரண்டு பொருள்கள் போல் தோன்றுகின்றனவேயன்றி, உண்மையில் ஒரே

பொருள்தான் என்று விடையளித்திடுக. அவ்வுண்மையை நமது முன்னோர் கூறியுள்ள ஓர் உதாரணத்தால் விளக்குகிறேன்.

ஸ்தூல உலகத்தில் எங்கும் நிறைந்துள்ள ஆகாயத்தையும், ஒரு மண் பாத்திரத்திலுள்ள ஆகாயத்தையும் பற்றி நாம் பேசவேண்டியதிருக் கிறதென்று வைத்துக்கொள்வோம். அப்போது நாம் முந்திய ஆகாயத் திற்கு ஒரு பெயரைக் கற்பித்துக்கொண்டும், பிந்திய ஆகாயத்திற்கு மற்றொரு பெயரைக் கற்பித்துக்கொண்டும்தானே பேசவேண்டும்? முந்திய ஆகாயத்திற்கு மகாகாயம் என்னும் பெயரையும் பிந்திய ஆகாயத்திற்குக் கடாகாயம் என்னும் பெயரையும் கற்பித்துக் கொள்வோம். இவ்விரண்டு ஆகாயமும் சொல்லளவில் இரண்டேயல் லாமல், பொருளளவில் ஒன்றே அல்லவா? ஆகாயம் எங்கும் எதனிலும் நிறைந்துள்ளது; அது கடத்துள்ளும், கடத்தின் ஓட்டினுள்ளும், கடத் திற்கு வெளியிலும் நிறைந்துள்ளது. அஃது அவ்வாறு எங்கும் நிறைந்ததா யிருக்கும்போது, அதனை மகாகாயம் என்றும், கடாகாயம் என்றும் பிரிப்பது எப்படி? பிரிக்க முடியாது. அதனைப் பற்றிப் பேசுவதற் காகவே, நாம் சொல்லளவில் கடத்தின் அளவைப் பற்றியுள்ள ஆகாயத்தைக் கடாகாயம் எனவும், அக்கடத்தையும் மற்றெல்லா வற்றையும் பற்றியுள்ள ஆகாயத்தை மகாகாயம் எனவும் கூறுகிறோம்.

அது போலவே, ஓர் உடலைப் பற்றியுள்ள அறிவை உயிர் எனவும், அவ்வுடலையும், மற்றைய எல்லாவற்றையும் பற்றியுள்ள அறிவைக் கடவுள் எனவும் கூறுகின்றோம். ஆகாயம் கடம் காரணமாக இரண் டாகத் தோன்றுவது போல, அறிவு உடல் காரணமாக இரண்டு பொருள்கள் போலத் தோற்றுகின்றதே யன்றி, உண்மையில் ஒரு பொருளேயாம். 'யான்' என்னும் அகங்காரம் உள்ளது உயிர். அவ்வகங் காரம் இல்லது கடவுள். அவ்வகங்காரம் ஓர் இரும்புச் சட்டைக்குச் சமமானது. அச்சட்டையைப் போர்த்துக் கொண்டிருப்பதனால், (உயிர் என்னும்) அறிவுக்குச் சர்வ வியாபகம், சர்வ சக்தி, சர்வ ஞானம் இல்லை. அச்சட்டையைக் களைந்துவிட்டால், அவ்வறிவு சர்வ வியாபகம், சர்வ சக்தி, சர்வ ஞானம் இவற்றோடு விளங்கும்.

கடவுள் என்னும் பொருளே பொறிகள் வழியாகப் பார்க்கப் படும்போது, உலகமாகத் தோன்றுகின்றது. உலகம் தோன்றும் காலத்தில், கடவுள் தோன்றுவதில்லை; கடவுள் தோன்றும் காலத்தில், உலகம் தோன்றுவதில்லை. இவ்வுண்மையை நம் திருமூலர் ஓர் உவமானத்தால் நன்கு விளக்கியுள்ளார். அவர் கூறுவதாவது:

மரத்தை மறைத்தது மாமத யானை;
மரத்துள் மறைந்தது மாமத யானை;
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்;
பரத்துள் மறைந்தது பார்முதற் பூதம்.

இதன் பொருள்: (மரத்தினாற் செய்யப்பட்ட) ஒரு யானை யுருவை நாம் பார்க்கும்போது, (அவ்வுருவுக்கு ஆதாரமான) மரம் நமக்குத் தோன்றுவதில்லை. நாம் (யானை யுருவுக்கு ஆதாரமான) மரத்தைப் பார்க்கும்போது, (அம்மரத்தால் செய்யப்பட்டுள்ள) யானை யுரு

நமக்குத் தோன்றுவதில்லை; அதுபோல, நாம் உலகப் பொருள்களைப் பார்க்கும்போது, (அவற்றிற்கு ஆதாரமான) பரம்பொருள் நமக்குத் தோன்றுவதில்லை; நாம் உலகப் பொருள்களுக்கு ஆதாரமான பரம் பொருளைப் பார்க்கும்போது, (அப்பரம்பொருளின் தோற்றமாகிய) உலகப் பொருள்கள் நமக்குத் தோன்றுவதில்லை.

மேற்கூறிய உண்மை பற்றியே, நம் திருவள்ளுவர் "எப்பொருளெத் தன்மைத் தாயினு மப்பொருள், மெய்ப்பொருள் காண்ப தறிவு" என்றார். இதன் பொருள்: (இவ்வுலகத்திலுள்ள) எந்தப் பொருள் எந்த வடிவோடு தோன்றினும், அப்பொருளின்கண் (அப்பொருளுக்கு ஆதாரமாயுள்ள) மெய்ப்பொருளைப் பார்ப்பதே ஞானம். ஆதலால், இவ்வுலகப் பொருள்களில் ஒவ்வொன்றும் கடவுளின் வடிவே யென்பதும், ஒவ்வொன்றிற்கும் ஆதாரமாயுள்ளது கடவுளே யென்பதும் வெளிப்படை. ஆதலால் யான் உலகப் பொருள்களுக்கெல்லாம் ஆதாரமாயுள்ள மெய்ப்பொருளை என் அறிவால் அறிகின்றேன்: உலகப் பொருள்களை யெல்லாம் கடவுளின் வடிவமாக என் கண் ணால் காண்கின்றேன்; என் மனத்தால் நினைக்கின்றேன்; என் வாக்கால் சொல்கின்றேன். நண்பர்களே! என்னைப் போலவே நீங்கள் ஒவ்வொருவரும் கடவுளை உங்கள் அறிவால் அறியலாம்; கடவுள் வடிவை உங்கள் கண்ணால் காணலாம்; உங்கள் மனத்தால் நினைக்கலாம்; உங்கள் வாக்கால் சொல்லலாம்.

> அறிவொன்றே மெய்ப்பொருளாம்; அவ்வறிவின் தோற்றம்
> செறிகின்ற இவ்வுலகாம்; தேரின் – அறிவொன்றே
> எண்ண'யான்' என்னுயிராம்; எண்ணாக்கால் மெய்ப்பொருளாம்;
> எண்ணல் அறிவின் இயல்.

*ஊழியன், தை 1936*



பிற்சேர்க்கை 5

# வ. உ. சி. - கடுஞ்சைவ விவாதங்கள்

## I

### அரங்கின்றி வட்டாடல்

*பொ. முத்தைய பிள்ளை*

அரங்கு என்பது இவ்விடத்துச் சூதாடுதற் பொருட்டு வகுக்கப்படும் அறையினையும், வட்டு என்பது சூதாடுகருவியினையுங் குறிக்கும். குறிக்கவே, அறையினையமைத்து ஆடுதலையே சூதாடுவோரும் முறைமையாய்க் கொள்வர் என்பது இனிது விளங்கும். அறைகளை வகுத்துக் கொள்ளாது ஆடின் வெற்றி தோல்வி அறியப்படாத வீணாட்டமாகும்.

இவ்வாறே, ஒழுக்க முறையை வரையறுத்துக் கூறப்புகுவோர், நூல்முறையை நன்கறிந்து அவ்வழியைப் பின்பற்றிக் கூறவேண்டும். நூல் முறையின்றித் தம்மனஞ் சென்ற முறையில் ஒழுக்க முறையைக் கூறுவோர் செயல் பயனில் செயலாகும்.

தேவகோட்டை மாணவர் சங்கத்தில் நாளிது வருடம் நிகழ்ந்த வருட பூர்த்தியில் அக்கிராசனம் வகித்த திருவாளர் தூத்துக்குடி வ. உ. சிதம்பரம் பிள்ளையவர்கள், "தென்புலத்தார்" என்பதற்கு அழகிய அறிவையுடையவர் எனப் பொருள் கூறி, இப்பொருட்கு மாறாகப் பிதிரர் எனக் கொள்ளும் பொருள் பொருத்தமற்றதெனவும், கடவுள் நேரில் வந்து கூறினும் நம்முடைய யுத்திக்குப் பொருந்தவில்லையாயின் தள்ளிவிடல் வேண்டுவதே முறைமை யெனவுங் கூறி மிக ஆரவாரஞ் செய்தனர். இவர்கள் சுதேசிக் கலகத்தின் போது தூத்துக்குடியில் தனக்குத் தோன்றிய யுத்தியே சாலச் சிறந்ததெனக்கூறி ஆரவாரஞ் செய்து, அதனால் தானடைந்த பயனையும் மறந்து உலகத்துள் ஒரு பகுதியை யாளும் அரசரையும், அவர் கட்டளையையும் மதியாமையால் சில நாள் மிகக்கொடுந் துன்பம் அநுபவித்தவாறு போல சர்வலோக நாயகராகிய கடவுளையும் அவர் கட்டளையையும் மதிக்கவில்லையாயின் நீண்ட நாள் ஆற்றொணாத் துன்பத்தை யனுபவித்து வருந்துவோமென்பதையும் மறந்தமை வருந்தத்தக்கது. இது நிற்க.

இவர் கருத்தை மிகப் பாராட்டி புகழ்ந்து தம்மிற்றாமே மகிழ்ந்தனர் பலர். இவர்களைப் பற்றி "சிற்றினம் அஞ்சும் பெருமை சிறுமைதான், சுற்றமாச் சூழ்ந்து விடும்" "அகப்பட்டி யாவாரைக் காணின் அவரின், மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்" என்பன யாதிய தேவர் திருவாக்குக்களுக்கு இலக்கியமாயின ரென்பதேயன்றி வேறென் சொல்வது.

இவர்களனைவரும் நெற்றிக்கண்ணைக் காட்டினும் குற்றம் குற்றமே யென்று நக்கீரர் கூறியதை அடிக்கடி யெடுத்துக் கூறுகின்றனர். கல்வி நிரம்பாமையால் நக்கீரர் அங்ஙனங் கூறினாரென்பதையும், கூறியதனால் அவர் அடைந்த துன்பத்தையும் சிறிதும் எண்ணினார் களில்லை.

கடவுளும் நமக்கு ஒன்றைச் சொல்ல வேண்டுமாயின் ஒரு வடிவத்தை மேற்கொண்டுதான் சொல்லல் வேண்டும். வடிவம் இருத்தலால் ஏகதேசத்தில் மயங்குதலுங் கூடும். ஆதலால், கடவுள் கூறியவற்றிலும் தவறு இருத்தல் கூடுமென்று தத்துவ சாத்திரங்கள் சாற்றுகின்றன. மண்ணுலகத்துள்ள உயிர் வர்க்கங்களுக்கும் சரீரம் உண்டு. விண்ணுலகத்துள்ள தெய்வ வர்க்கங்களுக்கும் சரீரம் உண்டு. இவ்விரு திறத்தவருக்கும் அநுக்கிரகஞ் செய்தற் பொருட்டுச் சில சமயங்களில் கடவுளுக்குந் திருமேனி யுண்டு. இம்மூவகை வடிவங்களும் ஒன்று போலிருக்க முடியுமா? ஒன்றுபோலிருக்குமாயின் மண்ணுலகத் தவர் விண்ணுலகத்தவர் கடவுள் என்னும் வேற்றுமை பொருந்தாது. ஆகையால் மூவகை வடிவங்களும் ஒன்று போலிருக்க முடியாதென்பது பெறப்படும். படவே, அம்மூன்றுந் தோன்றுதற்குரிய முதற் காரணங் களும் மூன்றுண்டென்பது இனிது விளங்கும். அந்த முதற் காரணங் களும் தம்முள் வேற்றுமையுடையவாயிருக்குமன்றி ஒற்றுமையுடையன வாயிரா வென்பது துணியப்படும். மண்ணுலகத்தவருடைய சரீரத் தோற்றத்திற்கு முதற் காரணம் அசுத்தமாயை. இது மோகத்தையுண்டு பண்ணுந் தன்மையினையுடையது. விண்ணுலகத்தவருடைய சரீரத் தோற்றத்திற்கு முதற் காரணம் சுத்தமாயை. இது ஞானத்தையுண்டு பண்ணுந் தன்மையினையுடையது. கடவுளுடைய திருமேனித் தோற்றத் திற்கு முதற் காரணம் திருவருட்சக்தி. இது ஞானமே வடிவாயுள்ளது. இவ்வுண்மைகளை நூல்வழியாகவும் பெரியார் வழியாகவும் அறிந்திருப் பராயின், அறிவிற் பெரியார் முன் ஒரு சிறிது நேரமேனும் நிற்க மாட்டாத வெற்றுரைகளைக் கூறி வீண் ஆரவாரஞ் செய்யத் துணியார். இதுவும் நிற்க.

இவர்களனைவரையும் மற்றொன்று கேட்கின்றோம். அஃதாவது: தங்கள் யுத்திக்குப் பொருத்தமுள்ளவைதான் கொள்ளத்தக்கதென்று இவர்கள் கூறுவது போல, வேறு சிலர் இவர்கள் கொள்கையை மறுத்து அவர்தம் யுத்திக்குப் பொருத்தமுள்ளவைதான் கொள்ளத்தக்க தென்பர். இவ்வாறே ஒவ்வொரு பகுதியாருங் கூறின், வரம்பின்றி யோடல் என்னுங் குற்றத்திற்குட்பட்டுப் பொதுமக்கள் வருந்துவரே. அங்ஙனம் வருந்தாதவாறு அனைவரும் ஏற்றுக்கொள்ளும் முறை மையை நிர்ணயிப்பதற்கு உபாயம் யாது? பழைய நூல்களைக் கொண்டு நிர்ணயிப்பதைவிட வேறு வழி உண்டா? நூலாராய்ச்சி யில்லாதார் கூற்று ஏகதேசத்தில் மிக நன்றாயிருப்பினும் அது கொண்டு அவரை அறிவுடையார் மதிப்பதில்லை. "கல்லாதான் ஒட்பங் கழியநன் றாயினும், கொள்ளார் அறிவுடை யார்" என்பது தேவர் கட்டளை. அம்மட்டோ "கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து, சொல் லாடச் சோர்வு படும்" என்றும் அறிவுறுத்தினர். உரையாசிரியருள் ஒருவரையொருவர் மறுத்த இடங்கள் பலவுண்டு, சைவ சமய

நூலாசிரியருள் ஒருவரை யொருவர் மறுத்த இடமே கிடையாது. ஒரு ஆசிரியர் ஒரு விஷயத்தைச் சுருக்கிக் கூறுவர். மற்றொரு ஆசிரியர் அதனை விரித்துக் கூறுவர். ஒரு ஆசிரியர் சொல்லாத விஷயத்தை மற்றொரு ஆசிரியர் சொல்லுவர், பிற சமய நூலாசிரியரை மட்டும் மறுப்பர். இவ்வளவே யன்றிச் சைவமென்னும் ஒரு சமயச் சார்பிலுள்ள நூலாசிரியருள் ஒருவர் கருத்தை ஒருவர் மறுத்ததில்லை. ஆகையால், யாதானும் ஒரு நூலைப் பிரமாணமாகக் கொண்டுதான் தங்கருத்தைச் சாதிக்க வேண்டும். எந்த நூலைப் பிரமாணமாகக் கொண்டு தென் புலத்தார் என்பதற்கு அழகிய அறிவினையுடையாரென்று பொருள் கூறுகின்றனர். அச்சொல்லுக்கு அது பொருளன்று என்று நாங் கூறவில்லை. பங்கயம் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் சேற்றிற்றோன் றிய தென்பதேயாம். ஆயினும் சேற்றிற்றோன்றிய அல்லி முதலிய வற்றைக் குறியாது தாமரையினையே குறிப்பது நூல் வழக்கு. அவ்வாறே தென்புலத்தா ரென்பதற்கு அழகிய அறிவினையுடையாரென்னும் பொருளை நூல் வழக்குக் கொண்டு காட்டவேண்டும். அங்ஙனமின்றித் தம்மனஞ் சென்ற நெறியே செந்நெறி யென்பராயின் "அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய, நூலின்றிக் கோட்டி கொளல்" என்னுந் தேவர் கட்டளையாகிய இலக்கணம் பயன்படுமாறு இலக்கியமாயின ரென ஒதுக்கி விடுதலே அறிவுடையார் கடமையாகும்.

*சிவநேசன், 8 மாசி பிரபவ*
*(பிப்ரவரி 1928)*



## அரங்கு வகுப்பவர் யார்?

*வ. உ. சிதம்பரம் பிள்ளை*

பலவான்குடியினின்று பிரபவ மாசி அவ வெளியான "சிவநேசன்" பத்திரிகையில் "அரங்கின்றி வட்டாடல்" என்னும் தலைப்பெயரோடு பிரசுரிக்கப்பட்டிருக்கிற நிருபத்தைச் சில தினங்களுக்கு முன் யான் படித்தேன். அரங்கு வகுத்து ஆடல்புரிய விரும்புவோர், முன்னோர் ஆடல் புரிதற்கு வகுத்துக்கொண்ட அரங்கையும் உபயோகித்துக் கொள்ளலாம். முன்னோர் வகுத்த அரங்கில் சில பாகங்களைக் குறைத் தும், கூட்டியும், மாற்றியும், அவசியமாயின் புதிதாக ஓர் அரங்கு வகுத்தும், ஆடல் புரியலாம். முன்னோர் வகுத்த அரங்கையே வகுத்துக்கொண்டு ஆடல் புரிவதால் என்னவர்க்கு யாதொரு கேடும் உண்டாகாதென்று தோற்றுங்கால மெல்லாம் முன்னோர் வகுத்த அரங்கையே வகுத்துக்கொண்டு ஆடல் புரிவதும், முன்னோர் வகுத்த அரங்கைக் கொண்டு ஆடல் புரிவதால் என்னவர்க்குக் கேடு உண்டா கின்றது என்று யான் கண்ட பின்னர் முன்னோர் அரங்கின் சில, அல்லது பல, பாகங்களைக் குறைத்தும், கூட்டியும், மாற்றியும், அவசியமாயின் முன்னோர் வகுத்த அரங்கினை முற்றும் விடுத்துப் புதியதோர் அரங்கு வகுத்தும் ஆடல் புரிவதும் எனது இயற்கை.

மேற்கூறிய இயற்கையை முற்காலத்துப் பெரியார் சிலர் கொண்டிருந்ததாகவும், இக்காலத்துப் பெரியார் சிலர் கொண்டிருப்பதாகவும் யான் அறிகின்றேன். இவ்வியற்கைக்கு மாறாக, முன்னோர் வகுத்துக் கொண்ட அரங்கினையே உபயோகித்து ஆடல் புரியவேண்டுமென முற்காலத்துப் பெரியார் பலர் கூறியுள்ளார் என்பதையும், இக்காலத்துப் பெரியார் கூறுகின்றனர் என்பதையும், யான் அறிவேன். அப்பெரியார் பலருக்கு என்னைப் போன்றார் கூறுவது நமது முன்னோர் நம்மவர் ஆடலுக்கு அரங்கு வகுத்தபோது நமது நாட்டில் இருந்த பொருள் நிலைமையும், நமது நாட்டினர் கொண்டிருந்த மனோ நிலைமையும் வேறு; இப்போது நமது நாட்டில் நாம் காண்கிற பொருள் நிலைமையும், நமது நாட்டினர் கொண்டிருக்கிற மனோ நிலைமையும் வேறு என்பதேயாம். முன்னோரை ஒட்டியோ ஒட்டாமலோ, ஒட்டியும் ஒட்டாமலுமோ, என்னைப் போன்றார் வகுக்கும் அரங்கினைக் கொண்டு ஆடல் புரிய விரும்புவோர் எமது அரங்கினைக் கொண்டு ஆடல் புரியட்டும், விரும்பாதார் முன்னோர் அரங்கினையே கொண்டு ஆடல் புரியட்டும்.

இனி, "அரங்கின்றி வட்டாடல்" என்னும் நிருபத்தைப் பற்றி யான் கூற விரும்புவனவற்றைக் கூறுகின்றேன். அதன் முதலாவது பகுதியில் (பாராவில்) "அறையினை வகுத்துக் கொள்ளாது ஆடின் வெற்றி தோல்வி யறியப்படாத வீண் ஆட்டம் ஆகும்" என்று கூறப்பட்டுள்ளது. அக்கூற்று எனக்கும் உடன்பாடு. யானும் என் நாட்டினரும் ஆடல் புரிவதற்கு ஓர் அரங்கு யான் வகுக்கின்றேன். அவ்வரங்கில் ஆடல்புரிந்து வெற்றி தோல்வி கண்டு இன்புறுவாராக. யான் வகுக்கும் அரங்கில் ஆடல் புரிய விரும்பாதார் தமது பொருள் நிலைமைக்கும், மனோ நிலைமைக்கும் பொருத்தமான வேறு அரங்கினைக் கொண்டு ஆடல் புரிந்து இன்புறுவாராக.

அதன் இரண்டாவது பகுதி "ஒழுக்க முறையை வரையறுத்துக் கூறப்புகுவோர் நூன் முறையை நன்கறிந்து அவ்வழியைப் பின்பற்றிக் கூறல் வேண்டும் எனவும், நூன்முறை யின்றிக் கூறுவோர் கூற்றுப் பயனில் கூற்றாம்" எனவும் கூறுகின்றது. நூன் முறையை மாத்திரம் அல்லாது யுத்தியையும், அனுபவத்தையும் நன்கு அறிந்து அம்மூன்றுக்கும் பொருத்தமாக ஒழுக்கமுறையைக் கூறுதல் வேண்டும்; யுத்திக்கும் அனுபவத்திற்கும் பொருத்தமில்லாத நூன்முறை யாருடைய கூற்றாயினும் பயனில் கூற்றாகவே முடியும். நூலையும், யுத்தியையும், அனுபவத்தையும் கவனியாது தம் மனம் சென்ற வழியை எடுத்துக் கூறுவோர் கூற்றைப் பற்றி இங்கு யான் பேச வேண்டுவதில்லை.

அதன் மூன்றாவது பகுதியில் யான் தேவகோட்டை மாணவர் சங்க மகாநாட்டில் பேசிய பேச்சுத் திரித்துக் கூறப்பட்டுள்ளது. யான் கூறியது "தென்புலத்தார் என்பதற்குப் 'பிதிர்கள்' என்றுதான் பொருள் உரைக்கவேண்டும் என்பதில்லை; அதற்கு (தென் - அழகிய; புலத்தார் - அறிவினையுடையார்) 'மெய்ஞ்ஞானிகள்' எனவும் பொருள் உரைக்கலாம்" என்பதே. அச்சொற்குப் 'பிதிர்கள்' என்று பொருள் உரைத்தலாகாதென்று யான் கூறினதில்லை. அன்றியும் 'தென்புலத்தார்'

என்ற சொற்குப் பிதிர்கள் என்று பொருள் உரைப்போர் தென்புலத்
தாரை ஓம்பும் முறைகள் இன்னவை யென்று கூறி எனது "மெய்யறம்"
என்னும் நூலிலுள்ள "முன்னோரைப் பேணல்" என்னும் அதிகாரத்தின்
பத்துச் சூத்திரங்களையும் படித்து அவற்றிற்குப் பொருளும் உரைத்தேன்.
"தென்புலத்தார்" என்ற சொற்குப் "பிதிர்கள்" என்ற பொருள் கடவுளே
வந்து கூறினும் தவறென்று யான் கூறியதாகச் சொல்வது முழுப்பொய்.

யுத்திக்கும் அனுபவத்திற்கும் பொருந்தாத ஒரு நூன்முறையைக்
கடவுளே வந்து கூறினும் அதனைத் தள்ளிவிடுவதே முறையென
யான் கூறினேன்; அவ்வாறே இப்பொழுதும் கூறுகின்றேன்; இனியும்
கூறுவேன். ஆனால், கடவுள் யுத்திக்கும் அனுபவத்திற்கும் பொருந்தாத
ஓர் நூன்முறையைக் கூறார் என்பது "கூறினும்" என்ற சொல்லின்
உண்மையால் விளங்கும். அரசர் கட்டளையை மீறிச் சிறை சென்றவர்
கள் யான் மாத்திரம் அல்லன்: ஸ்ரீ திலகர், மகாத்மா காந்தி, ஸ்ரீ தாஸ்
முதலிய இருபத்தையாயிரம் பேர்கள். அனாவசியமாக இவ்விஷயத்தை
எடுத்துக்கூறி என்னை அவமானப்படுத்த முற்பட்டதற்கு எவ்விதக்
கிரிமினல் சிவில் நடவடிக்கைகள் நடத்தலாம் என்று சட்ட நிபுணர்
களை ஆலோசித்துக் கொண்டிருக்கிறேன். யான் பேசிய பேச்சுக்குச்
சிறையனுப்பப்பட்டேன் என்பதை யான் மறக்கவில்லை. அரசர்
கட்டளை அல்லது சட்டம் சம்பந்தமான விஷயங்களைப் பற்றி
யான் இப்பொழுது பேச நேருங் காலையில் யான் முன்னினும்
அதிக ஜாக்கிரதையாகப் பேசுகின்றேன். கடவுளை யான் மிகமிக
மதிப்பவன்; கடவுளை மதியாதார் ஆற்றொணாத் துன்பத்தை அனு
பவிப்பர் என்பதை மறந்தவன் அல்லன். ஆனால், மனிதர் கட்டளை
களைக் கடவுள் கட்டளைகள் என்று கூறும் மதிவாணர்களில்
ஒருவன் அல்லன் யான்.

அதன் நான்காவது பகுதி என்னையும் என் பேச்சைக் கேட்டு
மகிழ்ந்தவர்களையும் பற்றிய நிந்தை மொழி. ஆனால், அந்நிந்தை
மொழி சம்பந்தமாகவும் என்ன நடவடிக்கை நடத்தலாமென்று
சட்ட நிபுணர்களை ஆலோசித்துக் கொண்டிருக்கிறேன். அதன்
ஐந்தாவது பகுதி நக்கீரரைப் பற்றியது. எவ்வகைத் துன்பம் வரினும்
அதனை பொருட்படுத்தாது உண்மையே கூறும் நக்கீரர், அரிச்சந்திரன்
போன்ற புலவர் அரசர் முதலியோரின் சந்ததியார் நாங்களென்று
கூறிமகிழ்கின்றதில் பிறர்க்கு விளையும் தீங்கு யாது? ஐந்தாவது
பகுதி என்னையாவது என் கூற்றையாவது பற்றியதன்று. அந்நிருப
நேயரின் உபதேசம். அது மிகை. யான் கூறுவதெல்லாம் 'கடவுள்
பிழைபடக் கூறார்; மனிதரே பிழைபடக் கூறுவர்; மனிதரது பிழைபட்ட
கூற்றுக்களை மறுக்க மக்கட்கு உரிமையுண்டு' என்பதே. அந்நிருப
நேயரோ கடவுள் நமக்குச் சொல்லவேண்டியவற்றைச் சொல்லுங்
காலையில் மயங்குதலும் கூடும் எனவும், கடவுள் கூற்றிலும் தவறு
இருத்தல் கூடும் எனவும் கூறுகின்றனர். கடவுள் கூற்றிலும் பிழை
உண்டென்று சொல்லும் அந்நிருப நேயரின் சொல்லைப் பார்க்கவும்,
கேட்கவும், உட்கொள்ளவும் என் கண்ணும், செவியும், உள்ளமும்
நடுங்குகின்றன. ஆதலால், அது விஷயத்தில் அந்நிருப நேயருக்கு
யான் தோற்றேன் என்று கூறி எனது தோல்வியை இன்பத்தோடு ஏற்றுக்

கொள்கிறேன். ஆனால், அவ்வாறு கூறும் அந்நிருப நேயர் யார் வகுத்த அரங்கைக் கொண்டு ஆடல் புரிகின்றார் என்பது தெரியவில்லை.

அதன் ஏழாவது பகுதியில் பெரும் பாகம் அந்நிருப நேயரின் கூற்றும் நிந்தை மொழியும். அவை தவிர மற்றவற்றிற்கு முன்னரே பதில் கூறியுள்ளேன். இங்கு ஒன்று மாத்திரம் கூறுகின்றேன். ஒருவன் வினையே விளைந்து விதியென்னும் பெயரோடு அவனைச் சாரும் என்பது சைவ நூலாசிரியர்களுக்கு எல்லாம் ஒப்பமுடிந்ததொன்று. ஒருவன் வினையின் பயனாகிய விதி மற்றொருவனைச் சாருமென்று எப்பெரியார் கூறினும், அது ஒப்புக்கொள்ளத்தக்கதன்று. அக்கூற்று வினை விதியின் தத்துவத்தை அடியோடு அழித்து விடுகின்றமையால் நாம் ஆரியப் புரோகிதருக்கோ, தமிழ்ப் புரோகிதருக்கோ, கொடுக்கும் கொடையால் நம் பிதிர்கள் துன்பம் நீங்குவர் என்னுங்கூற்று, வினை விதியைப் பற்றி நம் பெரியார் பலர் கூறியுள்ள கட்டளைக்கு மாறுபட்ட தொன்றாம். "வினைப்பயனாகிய விதியானது வினையைச் செய்தவனை யல்லாது வேறொருவனைச் சாராது" என்னும் அரங்கினை வகுத்து அவ்வரங்கினில் ஆடல் புரிகின்றவருள் ஒருவன் யான். அவ்வரங்கினில் ஆடல் புரிய விரும்புவோர் என்னுடன் சேர்வாராக.

"பல்லாவுள் உய்த்து விடினும் குழக்கன்று, வல்லதாம் தாய் நாடிக் கோடலை - தொல்லைப் பழவினையும் அன்னதகைத்தே தற் செய்த, கிழவனை நாடிக்கொளற்கு."

*சிவநேசன், 21 பங்குனி பிரபவ*
*(ஏப்ரல் 1928)*



## அரங்குவகுப்பவர் ஆடுவோரே

*பொ. முத்தைய பிள்ளை*

பிரபவ ௵ பங்குனி ௴ உகவ வெளிவந்த "சிவநேசன்" பத்திரிகையில் "அரங்கு வகுப்பவர் யார்" என மகுடமிட்டு வரையப்பட்டிருப்பதைப் பார்த்தேன். அதிற் கூறப்பட்ட சிலவற்றிற்கு யான் கூறத்தக்கனவற்றை இங்கே கூறுகின்றேன்.

அதன் முதலாவது பாகத்தில், அரங்குவகுத்துக் கொள்ளுமுறை விரிவாகக் கூறப்பட்டு, எவ்வாறாயினும் அரங்கு வகுத்துத்தான் ஆடல் புரியவேண்டுமென்பது முடிவாகக் கூறப்பட்டுள்ளது. எனது கருத்தும் இதுதான்.

அரங்கினை வகுத்து ஆடல் புரியுமாறு போல, நூல் முறையைப் பின்பற்றி ஒழுக்க முறையைப் போதிக்க வேண்டுமென்பதேயன்றி, அரங்கினை ஆடுவோரே வகுத்துக் கொள்ளுமாறு போல, நூலையும் தாமே செய்து அந்த நூல்வழியாக ஒழுக்க முறையைப் போதிக்கலா மென்பது "அரங்கின்றி வட்டாடியற்றே நிரம்பிய நூலின்றிக் கோட்டி கொளல்" என்ற ஆசிரியர் திருவள்ளுவர்க்குக் கருத்தன்று. முற்றுவமை ஒன்றற்குங் கிடையாது. கிடைக்குமாயின் அது உவமேயமெனப் படுமேயன்றி உவமை யெனப்படாது.

அதன் மற்றொரு பகுதி, "யுத்திக்கும் அநுபவத்திற்கும் பொருத்தமில்லாத நூன்முறை யாருடைய கூற்றாயினும் பயனில் கூற்றாகவே முடியு"மென்று கூறுகின்றது. நூலோடு பொருந்தாத யுத்தி பயனற்றதென்பதுதான் இதுவரை அனைவருங் கொண்டதாக நானறிந்திருக்கின்றேன். "கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும் கொள்ளார் அறிவுடையார்" என்பது திருக்குறள். நூலில் கூறப்படும் பொருள் நம்முடைய யுத்திக்குப் பொருத்தமற்றது போலத் தோன்றின், அப்பொருள் சம்பந்தப்பட்டமட்டில் நம்முடைய யுத்தி தெளிவடையவில்லை என்று கொள்ள வேண்டுமேயன்றி, நூல் தெளிவாகக் கூறவில்லை என்று கொள்ளுதல் கூடாதென்பது என் கருத்து. இவ்வாறு கொள்ளவில்லையாயின் ஒவ்வொருவரும் அவரவர் யுத்திக்குப் பொருத்தமில்லாத பொருளைத் தள்ளிவிடல் வேண்டுமென்று கூறி வரம்பின்றி ஓடல் என்னும் குற்றம் உண்டாகும். இதைப் பற்றி விரிவான ஓர் கட்டுரை எழுதக் கருதியுள்ளேன். அவகாசம் கிடைத்தபோது எழுதுவேன்.

அதன் வேறொரு பகுதி தென்புலத்தார் என்ற சொற்குப் பிதிரர் என்ற பொருள் கடவுளே வந்து கூறினும் தவறென்று கூறினதாக யான் எழுதியிருப்பதாய்க் கூறுகின்றது. கடவுள் நேரில் வந்து கூறினும் நம்முடைய யுத்திக்குப் பொருந்தவில்லையாயின் தள்ளி விடல் வேண்டுவதே முறைமை எனக் கூறியதாக யான் எழுதியிருக்கிறேன். அது, தென்புலத்தாரைப் பற்றிக் கூறியவிடத்தில் அமைந்திருத்தலால் அவ்வாறு பொருள் கொண்டார்கள் போலும்.

அதன் பிறிதொரு பகுதி, சிறைவாசத்தைப் பற்றிக் கூறி அவமானப் படுத்தப்பட்டிருக்கிறதாகக் கூறுகிறது. நான் அவ்வாறு எழுதவில்லை. சிலநாள் மிக்க கொடுந் துன்பம் அனுபவித்ததாக எழுதியிருக்கிறேன். அவ்வாக்கியத்திற்குரிய உண்மையான பொருளைச் சமயம் வாய்த்த பொழுது கூறுவேன். பொது நன்மைக்காகச் சிறைவாசஞ் செய்பவர் புகழத்தக்கவர் என்பதை நான் நன்கு அறிவேன்.

இன்னுமோர் பகுதி, கேட்டு மகிழ்ந்தவர்களை நிந்தித்ததாகக் கூறுகிறது. என் மொழியாக மகிழ்ந்தனரென்று கூறியிருத்தலே யன்றிப் பிறிதில்லை. இந்தவிடத்தில் வரம்பு மீறினவர்களைப் பற்றி ஆசிரியர் திருவள்ளுவர் கூறிய திருவாக்குக்களை எடுத்துக்காட்டியிருக்கிறேன்.

அதே பகுதி, கடவுள் நமக்குச் சொல்ல வேண்டியவற்றைச் சொல்லுங் காலையில் மயங்குதலுங் கூடுமெனவும், கடவுள் கூற்றிலும் தவறு இருத்தல் கூடுமெனவும் யான் கூறியதாகக் கூறுகின்றது. மாசி மீ கருவ வெளியான 'சிவநேசன்' பத்திரிகையில் திருத்தமென்னுந் தலைப்பின்கீழ் "சாற்றுறுகின்றன" என்றிருப்பதை "சாற்றுகின்றனர்" எனக் கொள்ளும்படி அறிவித்திருப்பதைப் பார்த்தால் இவ்வாறு எழுதியிருக்கமாட்டார்கள். ஒருகாலில்லாக்குறை பெருங்குறைதான். அக்குறை என்னால் நேர்ந்ததன்று.

*சிவநேசன், 28 பங்குனி பிரபவ*
*(ஏப்ரல் 1928)*



## II

## சிராத்தம்

*பொ. முத்தைய பிள்ளை*

சிராத்த மென்னுஞ் சொல்லின் பொருள், சிரத்தையோடு செய்யப்படு வது என்பதாம். யாருக்கு யாரால் செய்யப்படுவது என்னும் வினா நிகழுமாதலின், இறந்துபோன தந்தை தாயருக்குப் புத்திரரால் செய்யப்படுவதென விடையிறுக்கப்படுமென்க.

"அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" ஆதலின் அவருக்குச் செய்யும் இச்செயல் இல்வாழ்வானால் செய்யப்படும் கடமைகளுள் சிறந்ததாகும்.

"தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல்தான், என்ற ஆங்கு ஐம்புலத்து ஆறு ஓம்பல் தலை" என்பது திருக்குறள் ஆசிரியர் திருவள்ளுவர் இல்வாழ்வானால் செய்யத்தக்க தலையாய அறத்திற் குரிய இடம் ஐந்தெனக் கூறும் முறையில் தென்புலத்தாரைத் தலைமை யாக வைத்தமை காண்க.

அவரவர் செய்த வினையின் பயனை அவரவரே அனுபவிக்க வேண்டுமென்பது அனைவர்க்கும் ஒப்ப முடிந்தது. அநுபவத்தில் பிறழ்ச்சி நிகழாமை பொருட்டே நியதியென்னுந் தத்துவத்தை மாயை யில் நின்று இறைவன் தோற்றுவித்தவாறாகும். அவ்வாறாகவும், புத்திரர் செய்யுஞ் செயலால் தந்தை தாயர் பயன் பெறுவரென்று எண்ணுதல் எவ்வாறு பொருந்துமெனில், அஃதுண்மையே. இந்நிலவுல கில் சில இடங்களில் தந்தை எவ்விதமான தொழிலுஞ் செய்யச் சத்தியற்றவனாயிருந்து, பொருளீட்டும் முயற்சியில் சாமர்த்தியமுடைய புத்திரனது வருவாயைக்கொண்டு இன்ப மனுபவிக்கக் காண்கின்றோம். இதனால் பொருளீட்டும் முயற்சியைச் செய்யமுடியாமைக்குரிய தீவினையையும், மகன் வருவாயால் வாழ்தற்குரிய நல்வினையையும் தந்தை முன்னர்ச் செய்துள்ளானென்பது இனிது விளங்குமன்றோ? இவ்வாறே புத்திரனால் சிராத்தம் செய்யப்பெற்றுப் பயன் பெறுதற்குரிய நல்வினையைத் தந்தை செய்திருந்தானென்று கொள்வதினால் யாதொரு விரோதமும் இல்லாமை காண்க.

"எழுபிறப்பும் தீயவை தீண்டா பழி பிறங்காப், பண்புடை மக்கட் பெறின்" எனவும், "தம் பொருள் என்ப தம்மக்கள் அவர் பொருள், தம் தம் வினையான் வரும்" எனவும் அருளிச் செய்யப்பட்ட இரண்டு திருக்குறள்களும் புத்திரனால் தந்தை தாயர் இன்புறுவர் என்பதை வலியுறுத்தப்படுதல் காண்க.

"ஆவும் ஆனியல் பார்ப்பன மாக்களும், பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித், தென்புல வாழ்நர்க்கு அருங்கடனிறுக்கும், பொன்போல் புதல்வர்ப் பெறாதீரும், எம் அம்புகடி விடுது நும் அரண்சேர் மின் என, அறத்தாறு நுவலும் . . . எங்கோ வாழிய" என்பது புறநானூறு (செ. 9).

இதனால் அம்பு விடப்படுதற்குரிய வீரமற்றவரோடு சிராத்தம் செய்தற்குரிய புதல்வரைப் பெறாதாரை எண்ணினமை காண்க.

இந்தச் சிராத்தம் வைதிக சிராத்தம் சைவ சிராத்தமென இருவகைப் படும். வைதிக சிராத்தம் ஸ்மார்த்தப் பிராமணர்களால் வேதத்தை அநுசரித்துச் செய்யப்படுவது. சைவ சிராத்தம் சைவர்களால் சிவா கமத்தை அநுசரித்துச் செய்யப்படுவது. சைவர்களுக்கும் இக்கிரியை ஸ்மார்த்தப் பிராமணர்கள் செய்துவைப்பது எவ்வாற்றானோ வழக்கத் தில் வந்துவிட்டது. ஸ்மார்த்தப் பிராமணருக்கோ சைவக் கிரியை தெரியாது. வைதிகக் கிரியையை ஏனையோருக்கு அவர்கள் செய்து வைப்பதுமில்லை. சைவர்களுக்கு ஸ்மார்த்தப் பிராமணர்கள் செய்து வைக்கும் கிரியையானது சைவம் வைதிகமென்னும் இரண்டும் அல்லாத செயலேயாகும்.

ஆகையால் மந்திரலோபம் கிரியாலோப மின்றிச் செய்துவைக்கும் ஆதிசைவ பிராமணர்களைக் கொண்டே சிவாகமத்தை அநுசரிக்கும் சைவர்களனைவரும் சிராத்தக் கிரியையினைச் செய்து வாழ்வார்களாக. ஆதி சைவர் கிடைக்கவில்லையாயின், வருவாய் நிமித்தமாகவேனும் சைவக் கிரியை நன்கு அறிந்துவைத்திருக்கும் ஸ்மார்த்தப் பிராமணர் களைக் கொண்டு செய்து கொள்க.

*சிவநேசன், 21 பங்குனி பிரபவ*
*(ஏப்ரல் 1928)*



## சிராத்தப் பலம்

*வ. உ. சிதம்பரம் பிள்ளை*

பிரபவ ஞ பங்குனி மீ உகஉ வெளிவந்த "சிவநேசன்" பத்திரிகையில் "சிராத்தம்" என்னும் தலைப் பெயரிய நிருபத்தைப் படித்தேன்.

அந்நிருபத்தில் கண்ட சிலவற்றைப் பற்றிச் சில கூறுதல் சிலர்க்கு நன்மை பயக்கும் என்று தோன்றுகிறதால், அவற்றை இங்குக் கூறுகின் றேன்.

### சில வினாக்கள்

1. 'சிராத்தம்' என்பதும் சிரார்த்தம் என்பதும் ஒரு சொல்லா? வெவ்வேறு சொற்களா?
2. "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்பதிலுள்ள, 'அன்னையும்' 'பிதாவும்' என்பன இறந்துபோன அன்னையையும் பிதாவையும் குறிக்குமா?
3. 'பிதிர்' என்னும் சொல் அன்னையையும் குறிக்குமா? குறிக்கும் எனின், எவ்வாறு குறிக்கும்? குறியாது எனின், இறந்துபோன அன்னையர் தென்புலத்தாரிற் சேர்ந்தவரா? வேறு புலத்தாரா?
4. அவனவன் செய்த வினையின் பயனை அவனவனே அனுபவிப் பன் என்றலும், புத்திரன் சிரத்தையுடன் செய்யும் வினையின்

பயனை அவனது இறந்துபோன தந்தை அனுபவிப்பன் என்றலும் ஒன்றுக்கொன்று முரண்படவில்லையா?

5. ஒருவன் செய்த வினையின் விளைவாகிய விதி அவனையே சாரும் என்றலும், ஒருவன் செய்த வினையானது மற்றொருவனைப் பாதிக்கும் என்றலும் வெவ்வேறு விஷயங்கள் அல்லவா?

## திருக்குறளுரை

"தம் பொருள்" என்னும் தொடக்கத்துக் குறளிலுள்ள "தந்தம் வினை" என்பதற்குத் தம்மை நோக்கி, "தம்மை நோக்கிச் செய்யப்படும் வினை" என்று பொருளுரைத்தல் புதுமையினும் புதுமை. அவ்வுரையினைத் தமிழ் இலக்கணம் இலக்கியம் கற்றார் எவரும் கொள்ளார். அப்பொருள் உரைத்த பெரியார் அக்குறள் சிதைந்திருந்த தன்மையைக் கண்டோ, காணாமலோ, அக்குறளுரையில் தம் மதக் கோட்பாட்டை நுழைத்திருக்கின்றனர். சிதைவுபடாத அக்குறட்பாடம்: "தம்பொருள் என்பவே தம்மக்கள்; அப்பொருள் தந்தம் வினையான் வரும்." அதன் உரைவருமாறு: தம்மக்களை தம்பொருள் என்று சொல்லுவர் (உலகத்தார்), (மக்களாகிய) அப்பொருள் தம் வினையினாலே உண்டாம். மக்கள் உண்டாவதற்குரிய வினையைச் செய்யின், மக்கள் உண்டாவர் என்றபடி. "தக்கார் தகவிலார்" என்னும் தொடக்கத்துக் குறளால், நல்வினையைச் செய்தார் நல்ல மக்களையும், தீவினையைச் செய்தார் தீய மக்களையும் பெறுவர் என்றனர், ஆசிரியர். "எழுபிறப்பும்" என்னும் தொடக்கத்துக் குறளின் உரை வருமாறு: மறம் புரியாது அறமே புரியும் மக்களைப் பெறுதற்குத் தவம் பல இயற்றுதல் வேண்டும், "மகன் தந்தைக் காற்றும் உதவி இவன் தந்தை என்னோற்றான் கொல்லென்னும் சொல்" என்றமையான். அத்தகைய தவம் புரிந்தவர்பால் தீவினைகள் அணுகா, "விளக்குப்புக இருள் சென்றாங் கொருவன், தவத்தின் முன் நில்லாதாம் பாவம்" என்றமையான். அக்குறளுக்கு இப்பொருள் உரையாது வேறு பொருள் உரைத்தல் பொருந்தாது. இவ்வுண்மை அக்குறளின் பொருளை உள்ளி உள்ளி ஆராய்ந்து நோக்க விளங்கும்.

## புறநானூறுரை

"ஆவும்" என்னும் தொடக்கத்துச் செய்யுளில் உள்ள "தென்புலம் வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும் புதல்வரைப்பெறா தீரும்" என்பதற்குப் பொருள் 'தென் புலத்தின் கண் (சூட்சும சரீரத்தோடு) வாழ்கின்றவர்கள், மகிழ்வதற்கு ஏதுவாய நல்வினையைச் செய்யும் புத்திரரைப் பெறாதீராகிய நீங்களும்' என்பதே. இங்கும் "தென்புலம் வாழ்நர்" என்பதற்கு 'அழகிய அறிவுலகத்தின்கண் வாழ்கின்ற மெய்ஞானிகள்" என்று பொருள் உரைப்பினும் அமையும். இப்பாட்டினும் தம் புதல்வரது நல்வினைகளால் தம் பிதிர்களது தீவினைகள் நீங்கும் என்று கூறப்படாமை காண்க.

## முடிவுரை

தம் பெற்றோர் இறந்த நாளிலேனும், வேறு நாளிலேனும் அவரைக் குறித்துச் சிரத்தையுடன் செய்யும் நல்வினைகள் (தென்புலத்தின்கண்

வசிக்கும்) தம் பெற்றோரை மகிழ்விக்கலாம். ஆனால் அந்நல்வினைகளின் விளைவுகளாகிய நல்விதிகள் அந்நல்வினைகளைச் செய்தாரையே சாரும்; அவரின் பெற்றோரைச் சாரா, அவை ஆதிசைவப் பிராமணர் மூலமாகப் செய்யப்படினும் அல்லது சுமார்த்தப் பிராமணர்கள் மூலமாகச் செய்யப்படினும்.

*சிவநேசன், 4 சித்திரை விபவ*
*(ஏப்ரல் 1928)*



## ஐயவினாக்களுக்கு விடை

(திரு. வி.ஓ. சிதம்பரம் பிள்ளை வினாக்களுக்கு, தஞ்சை ஜில்லா விஜயபுரம் சர்வமத சகோதர சங்கக் காரியதரிசி எழுதுகிறார்.)

1. சிரார்த்தம் என்னும் சொல் சிராத்தம் என மருவி வந்துளது.
2. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம் என்பது இறந்துபோன அன்னையையும் பிதாவையும் குறிக்கும்.
3. பிதிர் என்னும் சொல் அன்னையையும் குறிக்கும். எவ்வாறெனின் தந்தைவழி சுக்கிலமும் தாயின்வழி சுரோணிதமும் சந்ததிக்கு காரணமாகிறது. தந்தையின் சுக்கிலத்திலிருந்து ஜீவனும் சுரோணி தத்திலிருந்து ஜடமும் தோன்றுகிறது. இந்து மதக் கிரமப்படி சதிபதிகள் அன்பில் ஒன்றித்து வழுவில்லாக் காதலுடன் உணர்ந்து பிறந்த மக்களினத்தார்க்கு தந்தைவமிசம் பிதிர்க்கள் எனவும், அன்னை தனது புருஷனின் மனோ உணர்வில் கலந்து விட்டமையால் அன்னை வமிசமும் பிதிர்வமிசமே.

   பிதிர் என்பவர்கள் சூக்கும நிலையில் இருக்கும் ஓர்வித ஜீவாத்மாக்கள். அவர்கள் புனர்ஜென்மமெடுக்க சிலகால தாமதத்தை உடையவர்கள்; அக்கால தாமதத்திற்குக் காரணம் அவர்கள் வினையின் சமஸ்காரம் உருவெடுப்பதற்குப் போதிய அவகாசத்தை எதிர்பார்த்தலேயாகும்.
4. ஒருவன் செய்த காமிய வினை அவன் பின் அனுபவிப்பதற்கு ஏதுவாகிறது. நிஷ்காமிய வினை ஏதுவாகிறதில்லை. பிதிர்களுக்குச் செய்யும் கடன் நிஷ்காமிய வினையாகும்.

*சிவநேசன், 18 சித்திரை விபவ*
*(மே 1928)*

❖





தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தின் தோற்றத்திற்கும் சைவ சித்தாந்தத்திற்கும் நெருங்கிய தொடர்பு உண்டு.

கப்பலோட்டிய தமிழர் என்று போற்றப்படும் வ.உ.சி., தம் அரசியல் பணியினூடே சிவஞான போதத்திற்கு ஓர் எளிய உரையினை எழுதி 1935இல் வெளியிட்டார். அறுபதாண்டுகளுக்குப் பிறகு வெளிவரும் மறுபதிப்பு இந்நூல்.

வ.உ.சி.யின் தமிழ்ப் புலமையினையும், தத்துவப் பயிற்சியினையும், கருத்தியல் நிலைப்பாட்டையும் புலப்படுத்தும் அரிய நூல் இது. சைவ சித்தாந்தம் தொடர்பாகப் பல்வேறு சமயங்களில் வ.உ.சி. எழுதிய கட்டுரைகளும், பாடல்களும், கடுஞ்சைவரோடு நடத்திய விவாதங்களும், படங்களும் பிற்சேர்க்கையாக வழங்கப்பட்டுள்ளன.

வ.உ.சி.க்கும் சைவ இயக்கத்திற்கும் நிலவிய தொடர்பை விளக்கும் பதிப்பாசிரியர் ஆ. இரா. வேங்கடாசலபதியின் முன்னுரையும், சைவ சித்தாந்த மரபில் வ.உ.சி.யின் உரை பெறும் இடத்தை அறுதியிடும் சி. சு. மணியின் ஆய்வுரையும் நூலுக்கு நுழைவாயிலாக அமைகின்றன.